# வழுவேல் சதகம்





தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
**சரசுவதி மகால் நூலகம்**
தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 236

# வடிவேல் சதகம்

(முத்துக்குமரன் இயற்றியது)

பதிப்பாசிரியர்:
**புலவர் வீ. சொக்கலிங்கம்,**
தமிழ்த்துறை (ஓய்வு),
சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
**சரசுவதி மகால் நூலகம்,**
தஞ்சாவூர்.

2006 ] [ விலை : ரூ. 50-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | |
|---|---|
| நூற்பெயர் | : வடிவேல் சதகம் |
| பதிப்பாசிரியர் | : புலவர் வீ. சொக்கலிங்கம், |
| வெளியிடுபவர் | : இயக்குநர்,<br>சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 236 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : இரண்டாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : 2006 |
| தாள் | : TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : 24 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 120 |
| படிகள் | : 250 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஒளி அச்சு,<br>சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : லேமினேசன் அட்டை |
| பொருள் | : இலக்கியம் |
| விலை | : ரூ.50-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

நூறு பாக்களைக் கொண்ட நூல் "சதகம்" என்றழைக்கப்படுகிறது. தொல்காப்பியத்திலும், சங்க நூற்களிலும் இச்சதகக் குறிப்புகளில்லை. மாணிக்கவாசகப் பெருமானார் திருவாசகத்தில் "திருச்சதகம்" என்ற பெயர் காணப்படுகிறது. எனவே, "சதகம்" என்ற பா மரபு சங்க காலங்கட்குப் பின்னும் மணிவாசகப் பெருமான் காலத்துக்கு முன்னும் தோன்றியிருக்கக் கூடும்.

நூலாசிரியன் தான் விரும்பி வழிபடும் யாதானும் ஒரு கடவுளை முன்னிலைப்படுத்திப் பல்வேறு வகையால் நிகழும் உலக இயல்புகளையும் மக்களின் நல்வாழ்க்கைக்குப் பயன்படற்கேற்ற அறவுரைகளையும், நீதி, ஒழுக்கம், பெருமை முதலிய நற்பண்பாடுகளை வளர்க்கும் அறிவு நெறிகளையும், நல்லோரின் நற்குணங்களையும், தீயோரின் தீய பண்புகளையும், உபமானம் முதலியவற்றால் விளங்க எடுத்துரைத்தல், போன்றவை சதகங்களின் பொதுவியல் கூறுகளாகும். சான்றாக : குமரேச சதகம், கயிலாசநாதர் சதகம் போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

நூலாசிரியன், தனக்கு உதவிபுரிந்த நல்லோர்களின் நன்றி பாராட்ட, அவர்களுடைய பெயர்கூறித் தொடர்புபடுத்தி உரைத்தல் என்பதும் இதில் அடங்கும். சான்றாக மணவாள நாராயண சதகம் என்னும் திருவேங்கட சதகம், அறப்பளீசுர சதகம், அண்ணாமலை சதகம் போன்றவைக் குறிப்பிடலாம்.

**வடிவேல் சதகம்** எனும் இந்நூல் சோதிடம், சுகாதாரம் முதலானவற்றைக் கூறுவதால் கைலாசநாதர்சதகம் போலவும், கடவுள்மீது பாடப்பட்டதால் குமரேச சதகம் போலவும், சைவாகம விதி, பூசை முதலானவற்றைக் கூறுவதால் வசந்தராயச் சதகம் எனும் அண்ணாமலைச் சதகம் போலவும்,

துதி நூலாக அமைந்துள்ளதால் அபையாம்பிகை சதகம், அருணாசல சதகம், வடவேங்கட நாராயண சதகம் முதலானவை போலவும் பல கதைகளைக் கூறுவதால் எம்பிரான் சதகம் போலவும், பலமொழிகளை விளக்குவதால் தண்டலையார் சதகம், கோவிந்த சதகம் முதலானவை போலவும் மற்றும் பல சிறப்புக்களையும் தன்னகத்தே கொண்டுள்ளது.

இந்நூலின் ஆசிரியர் முத்துக்குமாரன் என்பது (100வது) கடைசிப் பாட்டால் விளங்குகிறது.

இந்நூலின் பாட்டுடைத் தலைவன் செங்கோடன் ஆவர்.

இது எமது சரசுவதி மகால் நூலக தமிழ்ச் சுவடி எண். 1406-ஐக் கொண்டது. இந்நூலின் பதிப்பாசிரியர் புலவர். வீ. சொக்கலிங்கம் ஆகும். இவர் இந்நூலகத்தில் நாற்பதிற்கும் மேற்பட்ட நூல்களைப் பதிப்பித்த பெருமைக்கும் பேற்றிற்கும் போற்றுதலுக்கும் சிறப்பிற்கும் உரியவராவார். தற்பொழுது இந்நூல் இரண்டாம் பதிப்பாக வெளிவருகிறது.

இந்நூல் வெளிவர நிதியுதவி நல்கிய நடுவண் அரசுக்கும், சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) வகிக்கும் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூல் நல்லமுறையில் வெளிவர துணைநின்ற கணினி பிரிவினருக்கும் என் இனிய பாராட்டுக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**சா. விஜயராஜ் குமார்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்
25-7-2006

# முன்னுரை

"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான்எனதென்று அவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே."

என்பது மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்தருளிய திருச்சதகம் பதினைந்தாம் பாடல். இது திருவாசகத்துள், 19-ஆவது பாடலாகக் காணப்படுகின்றது. சதக இலக்கியங்களில் இதவே முதலாவதாகத் தோன்றியது எனலாம். பக்தி வைராக்கியத்தினைக் கூறும் இது, மாயா உலகப்பற்றை நீத்து பற்றற்றான் பற்றினைப் பற்றும் நெறியினைக் கூறுவது. இது அந்தாதித் தொடையால் அமைந்தது. ஒரு பாடலின் இறுதியும், அடுத்த பாடலின் தொடக்கமும் பொருத்தப்படுவது அந்தாதி. 100-வது செய்யுளின் இறுதிச்சொல்லும், முதற்பாட்டின் முதற்சொல்லும் ஒன்ற (மெய்யனே; மெய்தான் என) அமைத்து மண்டலித்துப் பாடியது. இதன் பின்னர் பல சதக நூல்கள் இயற்றப்பட்டன.

## இதுவரை தெரியவந்துள்ள சதக இலங்கியங்களின் அகரவரிசைப் பட்டியல்

| நூற்பெயர் | ஆசிரியர் |
|---|---|
| **அ** | |
| அகத்தீசர் சதகம் | மத்தான் சாகிபு |
| அடைக்கலச்சதகம் | வயிரவநாதன் கவிராயர் |
| அண்ணாமலைச் சதகம் | திருச்சிற்றம்பல நாவலர் |
| அண்ணாமலையார் சதகம் | மாம்பாக்கம் திருச்சிற்றம்பல நாவலர் |
| அபயாம்பிகை சதகம் | கிருஷ்ணையர் |

**க**

| | |
|---|---|
| கஞ்சகிரி சித்தேசர் சதகம் | அனந்தநாராயண சர்மா |
| கடிகா சதகம் | கடிகாசதக அம்மான் |
| கதிர்காமச் சதகம் | கணபதிப்பிள்ளை புலவர் |
| கந்தபுராணச் சதகம் | சந்திரசேகர உபாத்தியாயர் |
| கந்தபுராணச் சதகம் | முத்துக்குமாரதாசர் |
| கந்தர் சதகம் | முத்து வைத்தியநாத பண்டாரம் |
| கருணாம்பிகை சதகம் | வாசுதேவ முதலியார் |
| கருப்பண்ணசாமி சதகம் | மிதிலைப்பட்டி அ.இராமசாமிக்கவிராயர் |
| கலைவாணி சதகம் | கி. சுந்தராச்சாரியார் |
| கழுகாசல சதகம் | கழுகாசலப் புலவர் |
| கழுகாசல சதகம் | திருமயிலை சண்முகம்பிள்ளை |
| கருப்பண்ணசாமி சதகம் | இராமசாமிக் கவிராயர் |
| காந்தி சதகம் | நா. முத்துசுந்தர முதலியார் |
| கார்க்கூர்ச் சங்கர சதகம் | லா.சி.சுப்பிரமணியஞ் செட்டியார் |
| கார்மண்டல சதகம் | அவிநாசி ஆறைகிழார் |
| கானாட்டுச் சதகம் | ? |

**கு**

| | |
|---|---|
| குமரேச சதகம் | வெங்குப்பிள்ளை |
| குருசிஷ்ய அந்தாதிச் சதகம் | வேதாந்த சிதாகாச சுவாமி |
| குருநாதர் சதகம் | கருணையானந்த சுவாமி |

**கே**

| | |
|---|---|
| கேசவர் சதகம் | வெங்குப்பிள்ளை |

**கை**

| | |
|---|---|
| கைலாசநாதர் சதகம் | சேலம்தம்பரம்பிள்ளை(சிதம்பரவாணர்) |
| கைலாசநாதர் சதகம் | கைலாசநாதக் கவிஞர் |

**கொ**

| | |
|---|---|
| கொங்குமண்டல சதகம் | கார்மேகக்கவிராயர் |
| கொங்குமண்டலசதகம் | வாலசுந்தரர் |

**கோ**

| | |
|---|---|
| கோகுலசதகம் | பாலூர் அமிர்தகவிஞர் |

| | |
|---|---|
| கோதண்டராம சதகம் | இராமதாசர் |
| கோமதியம்மை சதகம் | திருக்கமலப்புலவர் |
| கோவிந்த சதகம் | வெண்மணி நாராயணபாரதி |
| கோவிந்த சதகம் | முத்தப்பச்செட்டியார் |
| **ச** | |
| சங்கர சதகம் | லா.சி. சுப்பிரமணியஞ்செட்டியார் |
| சண்முகநாதன் சதகம் | அருணாசல நாவலர் |
| சதகப்பதிகம் (10 சதகங்களின் தொகுப்பு) | வண்ணச்சரபம் |
| சதனபுரீசர் சதகம் | இராமச்சந்திர குருசாமிதாசர் |
| சதானந்த சதகம் | பொன்னைய சுவாமிகள் |
| சதுர்லிங்க சதகம் | ? |
| சதுர்லிங்க தசகோத்திர சதகம் | ஆறுமுகமெய்ஞ்ஞான சிவாச்சாரியார் |
| சப்த சதகம் (7 சதகங்கள்) | வண்ணச்சரபம் |
| சயவரதர் சதகம் | வே.கி. நாராயணசாமிப் பிள்ளை |
| சல்லாசர் சதகம் | ? |
| சன்மார்க்க சதகம் | முத்து வைத்தியநாத பண்டாரம் |
| **சி** | |
| சிங்கார வேலாயுதர் சதகம் | முத்துசாமிக் கவிராயர் |
| சிருங்கார சதகம் | சுவாமிநாத தேசிகர் |
| சிவகாமி சதகம் | முத்துவைந்தியநாத பண்டாரம் |
| சிவகாமியம்மை சதகம் | மாயூரம் கிருஷ்ணையர் |
| சிவகுரு சதகம் | சிவானந்த சரசுவதி |
| சிவசங்கர சதகம் | ஏழூர் வீராசாமி உபாத்தியாயர் |
| சிவபெருமான் சதகம் | வண்ணச்சரபம் |
| சிற்சுகவாரிதிச் சதகம் | அ. மாத்ருபூதம்பிள்ளை |
| சீரங்க நாராயண சதகம் | வண்ணச்சரபம் |
| சீறாச்சதகம் | மகமத் சுல்தான் இபுன் அகமத் |
| சீனிவாச சதகம் | அனந்தநாத சுவாமிகள் |
| **சு** | |
| சுமதி சதகம் | எம். ஆர். சீனிவாசய்யங்கார் |
| சுமதி சதகம் | சமரபுரி முதலியார் |

**செ**

| | |
|---|---|
| செந்தில்நாயக சதகம் | வண்ணச்சரபம் |
| செங்கொண்டார் சதகம் | முத்தப்பச் செட்டியார் |
| செயவரதர் சதகம் | வெங்குப்பிள்ளை |
| செல்லாண்டியம்மன் சதகம் | சக்கரபாணி ஆச்சாரியார் |

**சொ**

| | |
|---|---|
| செக்கநாதர் சதகம் | சங்குப்புலவர் |
| சொக்கநாதர் மலைச்சதகம் | கவிஞர் அடிகள் கு.ஆ.அரங்கநாதனார். |

**சோ**

| | |
|---|---|
| சோழமண்டல சதகம் | ஆத்மநாத தேசிகர் |

**சௌ**

| | |
|---|---|
| சௌந்தரிய நாயகி சதகம் | தே. பெரியசாமிப்பிள்ளை |

**ஞா**

| | |
|---|---|
| ஞானசித்தர் சதகம் | மகாதேவ யோகீந்திரர் |

**த**

| | |
|---|---|
| தசரத ராமச்சதகம் | இ. மாவிலிங்கம் பிள்ளை |
| தசரதராமச் சதகம் | சீனிவாசாச்சாரியார் |
| தசாவதாரச்சதகம் | ? |
| தண்டலையார் சதகம் | தண்டலைச்சேரி சாந்தலிங்கக்கவிராயர் |
| தண்டலையார் சதகம் | படிக்காசுத் தம்பிரான் |
| தரிசனமாலைச் சதகம் | மீரான் சாகிப் புலவர் |

**தி**

| | |
|---|---|
| தியாகராசசுவாமி சதகம் | ப. சோமசுந்தரதேசிகர் |
| திருக்குறுங்குடி நம்பி சதகம் | வரராமயோகி |
| திருக்கூட்டச்சதகம் | தியாகராச தேசிகர் |
| திருச்சதகம் | சதாசிவம்பிள்ளை |
| திருச்செங்கோட்டுச் சதகம் | கிருஷ்ணசாமி முதலியார் |
| திருச்செங்கோட்டுச் சதகம் | சதாசிவ பண்டிதர் |
| திருச்செந்தில்நாயகச்சதகம் | தண்டபாணி சுவாமிகள் |
| திருச்செந்தூர் சண்முகசதகம் | வரராம யோகி |
| திருத்தொண்டர் சதகம் | மலைக்கொழுந்து நாவலர் கொடுமுடி |
| திருப்போரூர் சதகம் | பு. அ. சபாபதி முதலியார் |

| | |
|---|---|
| திருப்போரூர் பிரணவாசலச் சதகம் | பு. அ. சபாபதி முதலியார் |
| திருவரத்துறைநாத சதகம் | அர. அரங்கசாமி ஐயங்கார் |
| திருவருட்சதகம் | வி.மெ.மெய்யப்பச் செட்டியார் |
| திருவாசக திருச்சதகம் | மாணிக்கவாசகர் |
| திருவிளையாடற் சதகம் | கு. சுப்பிரமணிய ஐயர் |
| திருவுரு அட்டபந்தன சதகம் | சிவ.சு. குமாரசாமித்தேசிகர் |
| திருவேங்கடசதகம் (அ)மணவாளநாராயணசதகம் | வெண்மணி நாராயண பாரதி |
| திருவேங்கடநாத சதகம் | ? |
| திருவேங்கடசுவரர் சதகம் | கற்பூர வேங்கடசாமி செட்டியார் |
| தில்லைக் கற்பகவிநாயகர் சதகம் | சிதம்பரஞ்செட்டியார் |
| தில்லைக் கற்பகவிநாயகர் சதகம் | ஐயாத்துறை ஞானியார் |
| தில்லை நடராசர் சதகம் | ஐயாத்துறை ஞானியார் |
| தில்லை நடராசர் சதகம் | மாயூரம் இராமையா |

## தொ

| | |
|---|---|
| தொண்டமண்டல சதகம் | வடலூர் இராமலிங்க சுவாமிகள் |
| தொண்டைமண்டல சதகம் | படிக்காசுப்புலவர் |

## ந

| | |
|---|---|
| நடராசர் சதகம் | சிதம்பரநாத முனிவர் |
| நந்தமண்டலசதகம் | சொ. தெய்வநாயகப்பெருமான் நாயுடு |
| நந்தமண்டல சதகம் | திருவேங்கடர் புலவர் |
| நந்தமண்டல சதகம் | மாத்ருபூதமையர் |
| நந்தீசர் சதகம் | மஸ்தான் சாகிபு |

## நா

| | |
|---|---|
| நாராயணா சதகம் | ? |
| நானிலைச் சதகம் | தண்டபாணி சுவாமிகள் |

## நி

| | |
|---|---|
| நியாய சதகம் | ? |
| நீதிசதகம் | சுவாமிநாத தேசிகர் |

| | |
|---|---|
| **வேலாயுத சதகம்** | திரு. கந்தப்பையர் |
| **வேலாயுத சுவாமிமலை சதகம்** | கவிஞர் அடிகள் கு.ஆ.அரங்கனாதனார் |

**வை**

| | |
|---|---|
| **வைகுந்த சதகம்** | ? |
| **வைராக்கிய சதகம்** | சாந்தலிங்க சுவாமிகள் |
| **வைராக்கிய சதகம்** | சுவாமிநாத தேசிகர் |

அவைகள், பல்வேறு வடிவங்களில் எழுந்தன. சதம் எனில் நூறு. எனவே சதகம் என்பது நூறு பாடல்களைக் கொண்டது. எனவே அவைகள் நூறு பாடல்களைக் கொண்டு பல்வேறு செய்திகளைப் பலவிதமாகக் கூறின. அவற்றுள் ஒன்று வடிவேல் சதகம்.

இந்நூல் சோதிடம், சுகாதாரம் முதலானவற்றைக் கூறுவதால், கைலாசநாதர் சதகம் போலவும் கடவுள் மீது பாடப்பட்டதால், குமரேசசதகம் போலவும், சைவாகம விதி, பூசை முதலானவற்றைக் கூறுவதின் வசந்தராயச் சதகம் எனும் அண்ணாமலைச் சதகம் போலவும், துதி நூலாக அமைந்துள்ளதால், அவையாம்பிகை சதகம், அருணாசல சதகம், வடவேங்கட நாராயண சதகம் முதலானவை போலவும், பழமொழிகளை விளக்குவதில் தண்டலையார் சதகம், கோவிந்த சதகம் முதலானவை போலவும் மற்றும் பல சிறப்புக்களையும் கொண்டுளது.

இதில் காப்புச்செய்யுள் தனியாகக் காணப்படவில்லை. வான்சிறப்பினை முதன்மைப்படுத்திக் கூறியுள்ளதால் ஓரளவுக்கு திருக்குறளைப் போன்றுளது.



## இந்நூலில் கூறப்பட்டுள்ள சிறப்புச் செய்திகளாவன:

மேலேகண்ட (நான் கொடுத்துள்ள) தலைப்புக்களை நோக்குங்கால், நம் வாழ்விற்கு இன்றியமையாதவை களாகவே காணப்படுகின்றன. இவை வாழ்க்கையின் வழிகாட்டிகளாக அமைந்துள்ளன என்பதில் சிறிதும் ஐயமில்லை. பல நீதி முறைகளையும் கற்பிக்கின்றது இந்நூல் 25-ம் பாட்டில் மருத்துவம் பேசப்படுகின்றது. இது மனிதன் நோயின்றி பலகாலம் வாழ, நடக்கவேண்டிய நடக்கைவிதி முறைகளை நினைவூட்டுகின்றது. 30-ம்பாட்டில், சைவ சித்தாந்தம் பேசப்படுகிறது. சைவ சமய நாயன்மார்கள் 63-வரைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இதில் பெருஞ்சிறப்பு, 63-ம் பாட்டில் சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியவை பேசப்பட்டுள்ளன. 32 அறங்கள் கூறப்பட்டுள்ளன. யாத்திரைப் பயன் முதலான பிறவும், நூலின் பின்னர் கருத்துரையில் கூறப்பட்டுள்ளன.

இதில், பல இடங்களில் சிலேடை நயம் காணப்படுகின்றது. 61-ம் பாட்டில் வரும் பெற்றோர்கள் என்பதற்கு தாய், தந்தையர் என்றும், அடைந்தவர்கள் என்றும் பொருள் தரும். 63-ம் பாட்டில், அன்பதாய் என்னுமிடத்து அன்பது(50) ஆய் எனவும், அன்பு, அது, ஆய் எனவும் பொருள் பெறலாம்.

பெயர்த்தெழுதல் முதலான காரணங்களால் பிழைகள் மலிந்துள்ள இதில், 14-ம் பாட்டில், 3வது வரியில் சீர் குறைவாகவும், 65-ம் பாட்டில் 3வது வரியில் எதுகை சரியில்லாமலும் இருக்கின்றன. மற்றும் பல.

26-ம் பாட்டில் படைவேட்டி அம்மன் துதிக்கப்படு கிறாள். 64 முதல் 66-ம் பாடல் வரை, அலைவாய்க் குமரனாம் செந்தில்வேலவன் துதிக்கப்பெறுகிறான். பொதுவாக

எல்லாப் பாடல்களிலும், வள்ளி, தெய்வானை மணாளனாம் செயமுருக வடிவேலன் முன்னிலைப்படுத்தப்பெறுகிறான்.

இந்நூலின் ஆசிரியர் முத்துக்குமரன் என்பது (100-வது) கடைசிப்பாட்டால் விளங்குகிறது. இவர், தன்னை நாயேன் என்றும், அறிந்தும் அறியாமலும் மொழிந்த இச்சதகம் என்றும் அடக்கத்தோடு கூறுகிறார்.

இவரது ஆசிரியர் மருள்சித்தையர் போலும். நூலாசிரியர் தன் குருவினை, மனித உருவில் வந்த கைலாச வாசனாகிய சிவபெருமான் என்று கூறுவதினின்றும், இவர் நிறைந்த குருபக்தி உடையவர் என்பது தெரிகின்றது. இதனாலும், சைவ சித்தாந்தக் கருத்துக்களைக் கூறுவதனாலும் இவர், சைவர் என்றே கொள்ளல் வேண்டும். ஆயினும் விட்டுணுத்தலங்களைப் பற்றிக் கூறும்போது, வைணவத்தைப் புறக்கணிக்கவில்லை என்பது தெரிகின்றது. அடியார்கள் பக்திகொண்டவர் என்பதும் புலனாகின்றது.

எனவே முத்துக்குமரன் என்னும் ஆசிரியர் சிவபக்தி, குருபக்தி, அடியார்கள் பக்தி ஆகிய மூன்றிலும் சிறந்து விளங்கியவர் என்பது பெறப்படுகின்றது.

இவரை, ஆதரித்தவர், காளியின் பேரனாகிய செங்கோடன் ஆவார். இவர் அரசர் போலும். தன்னை ஆதரித்த அரசர்மீது இச்சதகம் பாடியுள்ளதால் இவர் அரசபக்தி உடையவர் என்பதும் பெறப்படுகின்றது. நிறைந்த கல்வியறிவும், சிறந்த புலமையும், உலகியல் அறிவு மிகவும் கைவரப்பெற்ற அனுபவமும், மக்கள் நல்வாழ்வு வாழவேண்டும் என்ற நல்லெண்ணமும் கொண்டே இவர்தம் இச்சதக நூலை ஒரு வாழ்வியல் நூல் என்றே கொள்ளலாம்.

விலையுயர்ந்த முத்துக்கள், கடலின் ஆழத்தில் கிடக்கின்றன என்று ஆங்கிலக் கவிஞன் கூறுவது போல இத்தகு சீர்மிகு நூலாசிரியர் தம் பிற செய்திகள் அறிவதற்கியலாதுள்ளன.

இந்நூலை இயற்றுவதற்கு முன், இவர், பல சதக இலக்கியங்களையும் பயின்றுள்ளார் என்பது தெரிகின்றது. சொல்நயம், பொருள்நயம், சந்தச்சிறப்பு, சொற்களின் ஆற்றொழுக்கு முதலானவைகளை இதனினின்றும் பயின்று இன்புறத்தக்கன. சில பாடல்கள் துதிப்பாடல்களாகப் பாடி மகிழுமாறும் அமைந்துள்ளன. கல்லாதாரும் பயிலுமாறு, எளிய இனிய நடையில் நல்ல தமிழில் இச்செய்யுட்களை இயற்றியுள்ளார்.

இந்நூலின் பாட்டுடைத் தலைவன் செங்கோடன் ஆவர். இவர் செங்குந்த மரபைச் சார்ந்தவர் என்பது 91, 93, 96 முதலான பாடல்களினின்று அறியக்கிடைக்கிறது. 16-ம் பாட்டிலிருந்து காளிமுதலியார் பேரன் என்பது தெரிகின்றது. இப்பாட்டால் இவர் மிகுந்த செல்வமுடையவர் என்பதும் தெரிகின்றது. புல்லூரிலாதிபன் என்றதனால் புல்லூரின் அரசன் எனக்கொள்ள இடமுளது. சென்னிகுளம் என்ற சொல் 82-ம் பாட்டில் வருகிறது. இது பாண்டிநாட்டில், திருநெல்வேலி மாவட்டம், கரிவலம் வந்த நல்லூருக்கு அருகில் உளது. சென்னிகுளமும், புல்லூரும் எந்தவகையில் தொடர்புடையது என்பது புலனாகவில்லை. பிறசெய்திகள் அறிவதற்கில்லை.

இதன் காலம், ஓலைச்சுவடியைப் பொருத்தமட்டில் இது ஒரு நூற்றாண்டுக்கு முற்பட்டதெனலாம். 19-ம் நூற்றாண்டின் பிற்பகுதி எனக்கொள்ள இடமிருக்கிறது.

இது எமது மகால் தமிழ்ச்சுவடி எண். 1406-ஐக் கொண்டது. இச்சுவடியினை, எமது நூலகக் கெமிக்கல் கன்சர்வேட்டர், திருவாளர் P. பெருமாள், எம்.ஏ., பி.லிப்.எஸ்.ஸி. அவர்கள் மூலம், எமது மகாலுக்கு அன்பளிப்பாக உதவியவர், திருச்சி கோட்டாத்தூர் வழி முத்தியம்பாளையம், திருவாளர் P. நல்லுசாமி அவர்கள் ஆவார்கள். அவர்கட்கு எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இச்சுவடியினை ஆய்ந்து வெளியிட அனுமதியளித்த, எமது நூலக முன்னாள் இயக்குநரும், மாவட்ட ஆட்சியருமான திருமிகு ஈ. சத்பதி, இ.ஆ.ப., அவர்கட்கும், தற்போதைய இயக்குநரும், மாவட்ட ஆட்சியருமான திருவாளர் து.இரா. இராமசாமி, இ.ஆ.ப., அவர்கட்கும், நூலக நிருவாக அலுவலர் பொறுப்பு, திருவாளர் அ.பஞ்சநாதன், எம்.ஏ., பி.லிப்.ஸி. அவர்கட்கும், இந்நூலை நன்முறையில் அச்சிட்டுத்தந்த தஞ்சை ஸ்ரீ வெங்கடாஜலபதி அச்சகத்தாருக்கும், எனது உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இந்நூல் வெளிவரப் பொருளுதவி புரிந்த நடுவண் அரசுக்கும் எனது மேலான நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இதுகாறும் தெரியவந்துள்ள சதக இலக்கியங்களின் பட்டியலையும், இந்நூலுக்கு தெரிந்தவரை ஒரு கருத்துரையையும் எழுதுவதற்குத் தோன்றாத்துணையாய் நின்ற இறையருளுக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்

. இந்நூலைப் பெற்றுப் பயனடைவோர், இதிலுள்ள குற்றங்களைந்து, குணங்கொள்வார் என நம்புகிறேன். இதுபோன்ற சுவடிகளைத் தம்வசம் கொண்டுள்ள பேரருளாளர்கள் அவற்றை எம்மிடம் தருவதன்மூலம் தான் புகழடைவதோடு உலகுக்கும் உதவியவர்கள் ஆவார்கள்.

இங்ஙனம்,

புலவர். **வீ. சொக்கலிங்கம்,**

தமிழ்த்துறைத் தலைவர்,

சரசுவதி மகால் நூலகம்..

தஞ்சாவூர்,
15-12-1985.

# வடிவேல் சதகம்

கார்கொண்ட மேகமழை பொழிவதுஞ் செமீது
கனயோக மிகவருவதும்
கனபுருஷ மேன்மையும் புவிவளந் தருவதும்
கனியமிர்த குணமாவதும்
பேர்கொண்ட சீர்த்தியும் வாழ்வதுங் கலை(யெ)லாம்
பெரிதுணர்ந் திடுபுலமையும்
பேசரிய கவிவாணர் ஆவதுஞ் சொன்னசொல்
பிசகாத சொல்லுறுதியும்
தார்கொண்ட (முடி)யரசர் முடிசிதற வருகின்ற
தைரியமுள வீரவளமுஞ்
சந்தான சவுபாக்கிய மட்டலெட்சு மீசுரத்
தானுமே பொருந்துதிறமும்
சீர்கொண்ட லவுகருணை[1] மாரிதன் மகிமையாஞ்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (1)

மேலான சாதியா யுடலெடுத் தாலென்ன
வித்தைகள் படித்துமென்ன
விபரவா ணிபனென வுலகமது புகழவே
மேதினி யிருந்துமென்ன
கோலாக லங்களுடன் ஆடம்ப ரங்களாய்க்
கொண்டாட வாழ்ந்துமென்ன
கோதையர்கள் மோகிக்க மதனென விருந்தென்ன
குபேரனாய் வாழ்ந்துமென்ன
பாலான மதுரமொழி மிகவுரைத் தாலென்ன
பரிகரிக ளேறியென்ன
பார்முழுது மொருகுடையி லாண்டென்ன
பாதமல ரன்பிலாதார் [நினதுபொற்

1. சீர்கொண்டுலவு கருணை எனல் பொருந்தும்.

*சீலமுட (ன)வன்பத மறவாத காளிதருஞ்*
*செங்கோடன் மனதிலகலாத்*
*திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே*
*செயமுருக வடிவேலனே !* *(2)*

*வேதியர்க் கருமறை யோதுவது சொல்ப்பலிதம்*
*விஞ்சையர்க் கழகதாகும்*
*வீரமுடை யோர்க்கழகு தைரியம் வைசியர்க்கு*
*மேலான திறமையழகாம்*
*நீதமுடை யோர்க்கழகு சமனாக நிற்பதே*
*நேசருக் கழகுபரிவாம்*
*நீரினுக் கழகுரசம் வீரனுக் கழகுமதி*
*நீள்குதட்[1] கழகுநளினம்*
*தூதுவரு வோர்க்கழகு மதுரவார்த் தைகளின்ப*
*சுதனேம னைக்கழகதாம்*
*துய்யதுணை யென்றடுத் தோரைக் காப்பதே*
*தொல்லுலகி லாற்கழகதாம்[2]*
*சீதமலர் வாவிசெறி புல்லூரி லாதிபன்[3]*
*செங்கோடன் மனதிலகலாத்*
*திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே*
*செயமுருக வடிவேலனே !* *(3)*

*நீர்மருவு மேரிகுள மாறருக தாகவும்*
*நெல்பனைகள் கமுகுகதலி*
*நேர்த்தியுள புவனம் பலசோலை சூழவும்*
*நீதியா சனங்கோவிலும்*
*பேர்பெருகு பெண்களும் கற்றபெரி யோர்களும்*
*பிரம்மகுல வகரங்களும்*
*பேசரிய சத்திரம டங்கள்கடை வீதியும்*
*பிரபலவர்த் தகர்கூட்டமும்*

---

1 , 2= ?

3. புள்ளூரி லாதிபன் எனில் வைத்தீசுவரன்கோயில் முத்துக் குமரனைக் குறிக்கும்.

ஏர்மருவு நவதானி யங்களும் விளைவதா
மீவுபெறு தயாளமுளதா
யீசன்மா லுங்கோயி லாடலொடு பாடலு
மிருக்கின்ற ஊர்கள்தனிலே
சேர்க்கின்ற பேர்களைச் சொர்க்கவா சிகளென்பர்[1]
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (4)

பொய்யினில் மிகுத்தவ ரறிவீனர் மூ(ர்)க்கரும்
புலாலுணுங் கொலைபாதகர்
பொருள்திருடு கோளருஞ் சிலைகறடு வடவியும்
புலிகரடி தொனிகளுளதாய்
வெயில்நின்ற நீளலாய்த் துன்மார்க்கக் குடிகளாய்
வீடுவீ டரசாள்வதாய்
வேட்டைநாய் திரளதா யுபகூப சுனைகளாய்
விரிதலைக் குறள்மாதராய்
பையரவு[2] வளைகளாய்க் கூகைதொனி யுள்ளதாய்
பலவகைத் தெய்வமுளதாய்ப்
பஞ்சையாய் நாலஞ்சு குடிசையா யிருக்கின்ற
பட்டியே நரகவாசம்
செய்யாறு சோலைசூழ் புல்லூரி லாதிபன்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (5)

மயிராட்டி னடியிலெழு தூசியில் மயானத்தில்
மடிபிணஞ்[3] சுடுபுகையிலே
வருகழுதை புரழ்கின்ற சாம்பலி லடைந்துதுயில்
மாமுகங்க ளளைபின்னில்[4]
தயிர்க்குடம் நிற்கை பூனைவால் தன்னில்முந்
தானையென் றொருகைவீச்சில்

1. சேர்க்கவா சிகளின்பர் என்றுளது. 2. பய்யரவு என்றுளது.
3. மடிபுனஞ் என்றுளது. 4. தெளிவிலது.

தண்புனற் கொண்டுபாத் துக்கழுவில் நீர்படாத்
தானத்தி லளர்நிலத்தில்
மயிர்நகம் விழுந்துள விடத்திலே திருவலகு
வாரிவிழு தூசிதனிலே
மனவடிவ தாயிருப் போரிடத் தேயவல
வருசிரிப் புடையோர்கள்பால்
செயிர்மருவு கலதியுறு வாளென்பர் முதியோர்கள்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (6)

காலையிலும் மாலையிலும் நித்திரை புரிந்திடில்
காலால்நி லங்கீறிடில்
கைத்துரும் பைக்கிள்ளிப் பகல்போக முஞ்செய்யில்
காலகுடி முடிசாய்த்திடில்
மாலைமயிர் கோதிடில் நாசிமேல் விரல்வைக்கில்
மார்பினைத் தான்பிரட்டில்
மனைவாச லில்படியி னில்(தலை வைத்தல்)
மஞ்சநிழ லம்மிமீதில்
கோலமுள தீபநிழல் சேர்ந்திடு மிடத்திலுங்
கொடுங்கன லடுப்பில்வைக்கில்
கழுதையின்[1] மீதிலிருந் தாற்றுத லவ்வகைக்
கூடுவா ளாகாதுகாண்
சேலனைய விழியிளந் திருமாது விளையாடுஞ்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (7)

பசுநடந் திடவெழுந் தூளிதனி லோமஞ்செய்
படர்புகையி லரியபெரியோர்
பாதத்தி லேமனந் திடமான பேர்கள்பால்
பசுவினுட வால்மயிரிலே

---

1. அகமுதையின் என்றுளது.

சுரியாமி டத்திலே பரிமுகந் தன்னிலே
துய்யவெலு மிச்சம்பழந்
தோட்டிடுங் கையிலே தாம்பூல தானத்தில்
துங்கவெண் சங்கத்திலே
கசிவாக நயவார்த்தை சொல்வோரி டத்திலே
கனராச சமூகத்திலே
கங்கையிளங் கரையிலே திங்களெழு மிரவிலே
கனகதா னியராசியில்
திசைபுகழ்ந் திடுங்கமலை மேவிடுவ ளென்பரே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (8)

வனந்தனி லெருக்குடன் பேய்ச்சுரை தளர்ந்து[1] பூ
மலர்ந்தென்ன மாய்ந்துமென்ன
மறைநாய்க்கு மடிசுரந்[2] தொழுகுபா லிருந்தென்ன
வன்குரால்ப் புன்கழுதையில்
சினந்திடுங் கருங்குரங் கிலும்மயிர் வளர்ந்தென்ன
வருமிரவ லர்க்கிரங்கி
மகிழ்வதா யுதவாத (வு)லுத்தன்கு பேரனாய்
வாழ்ந்திருந் தாலுமென்ன
தினந்தினம் மகிழ்ந்துனது பாதமலர் மறவாத
செங்கோடன் மனதினகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (9)

தாலவிரை[3] பெரிதெனினும் சிறிதான ஆலவிரை
தருநிழல்க் கொப்பாகுமோ?
தடவரையின் மீதுகற் கனமாயி ருக்கினுஞ்
சன்னமணி ரத்தினமாமோ ?
ஓலமிடு கூகைமொழி கூவினும் குதலையான்
உரைகிளிக் குரலாகுமோ?

---

1. தவிர்ந்து எனல் பொருந்தும். 2. மஷசுரந் என்றுள்ளது.
3.பனைவிதை (பனங்கொட்டை)

ஒருநாளு வாமட்டி நெட்டிமல ரானது
முயல்முல்லைப் பூவாகுமோ?
தூலமென உடலது பருத்துமே நரையராய்த்
தோன்றினு மவர்பெரியரோ?
சுத்தமும் ஞானமும் வித்தையும் புத்தியுந்
தோற்றும்வா லிபர்பெரியராம்
சேலெனும் விழிமாதர் மால்கொள்ளு மதனான
செங்கோடன் மனதினகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (10)

கைப்பது மிகுந்தபேய்ச் சுரைக்காயு முந்திரிக்
கனிக்குநிக ராயிராது !
காட்டுமர நல்வயிர்[1] மானாலுஞ் சந்தனக்
கட்டைதரு மணமாகுமோ ?
மைப்பொருது கண்வேசி யழகுமெழி லில்லாத
மனைவிகற் புக்கிணையதாகுமோ ?
வாரியில் பெய்யுமழை[2] சிப்பியின் வாய்முத்து
விழுமழைத் துளிதனக்குநிகரோ ?
எப்போது மீவில்லார் தருமமுஞ் செய்கின்ற
தில்லாத[3] பேர்களுநிகரோ ?
இயம்பிடாப் பிரசங்கி களானபேர் கற்றிட்ட
இப்பண்டி தற்குநிகரோ?[4]
செப்பரிய தமிழ்வாண ரெப்போது மேபுகழும்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (11)

அரவினைக்[5] கைப்பிடித் தாட்டலாம் பிணியை
அவிழ்தத்தி னால்போக்கலாம்

---

1. காட்டுவை மற்றுயிர என்றுள்ளது. 2. பேயுமளை என்றுளது. 3.லில்லாத என்றுள்ளது. 4. யிலம் விடப் பிறசங்கி களானபேர் கறத்யித பாஷதற்கு நிகரோ என்றுளது. 5. அறவினை என்றுளது.

அக்கினித் தம்பமுஞ் சலத்தம்ப மும்புரிந்
தாடலாம் நூற்றெட்டடி[1]
மரமேறி நாவியுட னெட்டியுந் தின்னலாம்
மறப்புலியை வாய்க்கட்டலாம்
மகாபூத பேய்களை ஏவலது கொள்ளலாம்
வன்சொம்பு பொன்னாக்கலாம்
நரைதிரை யில்லாமல் மூப்பிளமை யாக்கலாம்
நற்குணவி வேகமில்லா
நண்ணாத பேர்களுக் கிதங்கள்பல சாத்திரம்
ஞானநெறி நீதிசொல்லி
திரமான கல்நெஞ்சைத் திருப்பமுடி யாதுகாண்
செங்கோடன் மனதினகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (12)

தந்தைதாய் வாக்கியந் தவறாத பேர்களைத்
தக்கசுரு புத்திரனெனலாம்
தன்குலம் விளங்கவே வருகின்ற பிள்ளையைத்
தருபகீ ரதனெனலாம்
சந்ததம் பொய்வாயி லில்லாத[2] பேர்களைச்
சத்திய(வ)ரிச் சந்திரனெனலாம்
தான்சொன்ன படியொன்று தப்பாத பேர்களைத்
தாமசீ ராமனெனலாம்
நிந்தையது சொல்கினும் மனம்பொறுத் தோர்பயம்
நீக்கினோன் விசயனெனலாம்
செந்தமிழ் வாணர்க்கு மைத்தரு வாயுதவு
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (13)

வானமதி லேபல உடுக்கண்டி ருந்தென்ன
மதியொன்று தானாகுமோ

---

1. நூத்தெட்டடி என்றுளது. 2. பொய்வாய்மை யில்லாத என்றுளது.

வராகமும் பலகுட்டி யீன்றென்ன ஒன்றுபெற்ற
வாரணக் கன்றாகுமோ
மீனும்வெகு பொரிவுகளை யீன்றென்ன நீரிலொரு
வெங்கரா வாகுமோதான்
மெத்தவே கோழியுங் குஞ்சுகள் பொரித்தென்ன
மிககருட னொன்றாகுமோ
தானறிவு யில்லாதபிள் ளைகள்நூறு பெற்றென்ன
சற்குணவி வேகமுள்ள
சன்மார்க்க னொன்று போதுமவ னால்மிகுந்
தன்குலமே லாம்விளங்கும்
தேனவிழ் கடப்பமலர் மாலையணி மார்பனே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளமண வாளனே
செயமுருக வடிவேலனே ! *(14)*

மெத்தவா டியகதிர் பயிர்தனக் கில்லாமல்
மிகுகடல் பெய்தமழையும்[1]
வெகுபசிய தாகவே வந்தவர்க் குதவாத
வேண்டுநறு நெய்பால்களும்
உற்றகாய் கறியுடன் புசித்தவர்க்[2] குபசரித்(து)
உதவிடு மனதானமும்[3]
உலகத்தி லேழையாய்த் திரிபவர்க் கீயாமல்
ஓங்கிய மிகுசெல்வமும்
பெற்றிடுங் குபேரனெனத் தாழ்வன்றி வாழ்கின்ற
பேர்க்குதவு சொர்ணதானமும்
பெருமைவிட் டும்மையால்ப் பலனில்லை
இதுவெலாம்
பேசுகிற பலனாகுமோ
சித்தம் மகிழ்ந்துமதி[4] பாத்திரம் அறிந்துதவு
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! *(15)*

1.பேய்ந்த மழையும் என்றுளது. 2. பொசிப்வர்க் என்றுளது. 3.அன்னதானமும்.
4. மகிழ்ந்ததமது என்றுளது.

வாரிநீ ராளமள விடிலுந்து லாத்தினால்
மதயானை நிறைகாண்கினும்
மகாமேரு வின்பொன்னை மாத்தறிந் தேவிலை
மதிக்கினும் பாம்பினடியை
சீராக வேயறிந் ததுநிச்ச யங்களைச்
செய்திடினும் பெரியோர்கள்தன்
சித்தமது காண்கினும் உயிருடலில் நிற்பதைத்
தேற்கினுமே கம்பொழிய
மாரியது தாரைதுகை காணிலு மாற்றினுள்
மணலெண்ணித் தான்பார்க்கினும்
வாளியை யொத்தவிழி மடமாத ராம்பெண்கள்
மனதறியப் போகாதுகாண்
தீரனென வருகாளி முதலிதரு குபேரனாம்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! *(16)*

எட்டிப்ப ழந்தனில் கட்டிமாம் பழந்தரும்
இனியசுவை யுண்டாகுமோ
இலவினுட காய்தனில்ப் பெரும்பலாச்சுளையதின்
இன்னமுத முண்டாகுமோ
நெட்டியின் கனிதனில் கருப்பஞ்சா றதுவுமே
நெருக்கியே பிழிவர்களோ
நெருப்பினில் மிகவுமே சீதளம் பொருந்துபனி
நீரதுவு முண்டாகுமோ
கொட்டியில் செங்கழுநீர்ப் பூவுண் டாகுமோ
குணமிலாப் பரத்தையர்களுங்
கொடுத்திடுங் காசாசை யன்றியே மதனெனக்
கொக்கோக லீலைபலவுந்
திட்டமுடன் செய்யினும் வைத்திடா ராசையது
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! *(17)*

மெத்தப்ப சிக்கின்ற போதில்லா தன்னமது
மிகவுண்ட போதிலென்ன
வெயிலில்வா டியகதிர் பயிர்தனக் கில்லாமல்
வீணாளில்ப் பேய்ந்துமென்ன[1]
சத்துரு தனைச்செயங் கொண்டுவரு போதினில்
தந்திடா வெகுமானமும்
தக்கவெகு நாள்ச்சென்ற போதென்ன வாலிபம்
தனின்செயாக் கலியாணமும்[2]
உத்தகிழ மாகிய போதிலும் வறுமையிலும்
உதவிடா தமர்கடனும்
ஓங்கிடும் போதினுற வாடியென் சமையத்துக்கு
உதவாதார் பின்புதவியென்ன
சித்தமகிழ் சோபனம் நித்தமும் விளங்கவரு
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(18)*

திரளான சபைமெய்க்க நடுவிலுச் சிதவார்த்தை
செப்புமவன் நூத்திலொருவன்
செந்தமிழ் விகர்ப்பங்கள் தானறிந் தேபுலமை
செய்வனா யிரத்திலொருவன்
நரராசர் சித்தம்வர நடந்திடுவ ரோபதி
னாயிரத்தி லொருவராகும்
நம்புடன் தண்டாம லீந்திடுந் தாதாவும்
லட்சத்தி னொருவனாகும்
பொருள்நெறி தெரிந்துமுறை வழுவாமல் வருபுனிதர்
புகழ்கோடி தனிலொருவராம்
போதகமருள் குருமணியை மறவாத சீஷனும்
பூதலத் தரிதுகண்டாய்
செருவசுரர் தமைவென்று அமரர்சிறை மீட்டவர்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(19)*

---

1. பெய்துமென்ன எனில் பொருந்தும். 2. கண்ணாலமும் என்றுளது.

எழுவகைத் தோற்றத்தில் மானிடச் சென்மம்
எடுத்திடலும் அரிதாகுமே
எடுத்தாலும் மேற்குலத் துதித்தநதி தீரத்தில்
இலகிய தலங்கடனிலே[1]
வழுவாம லெப்போதும் வாசமே செய்துதமிழ்
வல்லவன் றானாகியே
மகாதவத் தோரிடங் கேள்வியுந் துர்ச்சனரை
மருவாத குணசாலியாம்
பழமொழிக ளாகமம் பா(ர்)த்துமே சிவசமய
பரிபாலி னங்கள்செய்து
பகர்கின்ற சிவதபந் திரிகால சிவபூசை
பண்ணுமவன் அரிதரிதுகாண்
செழுமைதரு முன்செய்த புண்ணிய வசத்திலாஞ்
செங்கோடன் மனத்திலகலாத்
திருவுருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (20)

தயிர்பால்கள் வெண்ணெய்பல காயங்க ளுப்பொடு
தான்பெய்து நன்றாகவே
சமைத்தாலு மோபேய்ச்சு ரைக்காய்க் கசப்பறா
சக்கரையு முக்கனிகளும்
வயல்செய்து சேறாக்கி மதுவிட்டு மேல்நட்டு
வளர்த்தாலும் வேம்பானது
மாறாது கைப்பினைப் பாலமுர்தம் அரவுக்கு
வார்த்தாலும் விசமறாது
நயமான வார்த்தையொடு பரிபக்கு வங்களும்
நடுநீதி ஞானநெறியும்
நவமாயு ரைக்கினும் பொல்லாத மூர்க்கர்க்கு
நற்குணம் வாராதுகாண்
செயமான பாகைபுனை வீரசெங் குந்தனாஞ்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (21)

1. தவங்கடனிலே என்றுளது.

தவசிருந் தேயீன்ற மைந்தர்கள் தமக்குமே
தந்தைசெய் கடனேதெனில்ச்
சபைமூட னென்னாம லாகமம் புராணமொடு
சகலகலை வல்லவனெனப்
புவனங்கள் மெச்சவெகு வித்தைகற் பித்தலும்
பொருந்துதன் சாதித்தொழில்
புலமைகள் பழக்கியும் அதற்கேற்ற தாகவும்
பூங்குழல் கன்னிதன்னை
எவர்களுங் கொண்டாட நல்மணம் முடிப்பதாம்
இனியமைந் தர்கள்கடமையும்
ஈன்றவர் தமைப்பேணி அதிகசெல் வந்தேடி
இகபரம் வளர்க்கவென்பார்
சிவனுடைய புத்திரனே கணபதிதன் துணைவனே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (22)

நீர்தான் நுழைந்திடா விடத்தினில் உருக்கும்நறு
நெய்நுழைந் திடுமென்பரே
நெய்யது புகுந்திடா விடத்தினில் பால்களும்
நேராகவே நுழையுமே
சீரான பாலும் புகுந்திடா விடத்திலே
சிறியபுகை தானுழையுமே
சிறுபுகை நுழைந்திடா விடத்திலே தரித்திரர்கள்
தேகமது தான்குன்றியே
போர்செய்து வைதில்லை என்றாலும் மெள்ளவே
போய்நுழைந் திடுவர்கண்டாய்
பொருளிலாத் தரித்திரர்கள் போலவே சிறுமையது
பூதலந் தனிலில்லையே[1]
தேரோடும் வீதிசெறி புல்லூரி லாதிபன்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (23)

1. தன்னில்லையே என்றுளது.

புலியுயி ரிறந்துவிடி லல்லாம லேதனது
போர்த்ததோ[1] லுகிர்கொடாது
போர்க்களத் ததி(சூ)ர வீரருந் தன்னுயிர்
போகாது பின்கொடார்கள்
வலிதினிற் கற்புள்ள மங்கையரும் மடியாமல்
மாதன மளித்திடார்கள்
மகாலோப (வு)லுத்தருஞ் சீவனன வல்லாமல்
வழங்கிடா னொருகாசுமே
தலைபோகி லுஞ்சொன்ன மொழியில்லை யென்றுபொய்
சாத்திடார் தன்மவான்கள்
தனைநம்பி னோர்களை அரிசிவ னெதுக்கினும்
தளர்ந்துகை விட்டிடாமல்
சிலைமிகு கிரீடிபோல்க் காப்பரே மானவரர்[2]
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (24)

நெய்யினை யுருக்கியும் மோரைப் பெருக்கியும்
நீரினை யருக்கியுண்பார்[3]
நிசியினில் தயிரதும் பகலதில் பாலதும்
நிதபோக மும்விரும்பார்
மெய்தனில் தலையினில் எண்ணெயது சிக்காமல்
மீண்டுசுமை சுமவாமலும்
மெத்தவும் பசியாமல் பசியன்றி யுண்ணாமல்
விரைந்துநடை அதிராமலும்
வெயில்பனி மழைக்காற்றில் அலையார் பழங்கறிகள்
வேண்டார் மலஞ்சலத்தை
மிகவடக் காமலும் இருப்போர்கள் பேர்தனை
விளம்பினும் நோயணுகுமோ
செய்யது மிகுத்திடும் புல்லூரில் வாழ்தீரன்
செங்கோடன் மனதிலகலாத்

1. போர்த்துதோ என்றுளது. 2. காற்பரேமானபரா என்றுளது. 3.சுருக்கியுண்பார் என்பது பழமொழி.

திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (25)

மனப்பாட[1] மில்லாது புத்தகந் தனிலெழுதி
வைத்திடு நற்கல்வியும்
மறுமனை யாட்டிதன் வாழ்க்கையும் பரத்தையரை
மகிழ்வதும் பிறரடிமையும்
தனந்தேடி அன்னிய னிடத்திலே வைத்துந்
தன்னோடு பிறந்திடாரை
தன்தம்பி தமையனென வொப்பாரி[2] யாயுறவு
தானாடி யுற்றிடுவதுந்
தனதுதாய் தந்தை தமரென வொருசாதியைத்
தானம்பி மிகவாழ்வதுந்
சாத்துமிவை பத்து[3]மோ ரிடுக்கமா னதும்வந்த
சமயத்தி லுதவாதுகாண்
தினமுமே படைவேட்டி யம்மனடி மறவாத
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (26)

அரசொன்றும் மாவொன்றும் வேம்பொன்றும் புளிபத்து
மருள்விளாத் தானுமூன்றும்
அதிகசெல் வங்களைத் தருவில்வ மூன்றுடன்
ஐந்துநெல் லித்தாருவும்
தருவனைய தேங்கைந்து மாமரந் தானைந்துந்
தயவதா யித்தரணியில்
தன்கையி னால்வைத்து நீர்விட்டு வளரவே
தளறா தளித்தபேர்க்கு
நரகமது மூவேழு தலைமுறைக் கில்லையென
நான்மறைக ளேயுரைக்கும்
நலந்தருஞ் சொற்கமே[4] காணியா மிப்புவியில்
நன்மைமிக வுண்டாகுமே

---

1. மனோபாட என்றுளது. 2. ஒப்புமை சொல்லுதல். 3. பத்து இல்லை; ஏழே உள்ளன. 4. தலந்தருக் கொறகமே என்றுளது.

திறமான புல்லூரில் வாழ்கின்ற காளிதரு
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (27)

பொன்வெள்ளி யால்செய்த பாத்திரம னேகமும்
பூமியுங் கோதானமும்
பொருள்களும் வத்திரம் குடைகள்மிதியடிகளும்
போர்க்குதிரை கரியாயிரம்
கன்னிகா தானங்கள் பலகோடி செய்யினுங்
கருதிஇனம் வேணுமெனவே
கருத்தாசை கொண்டிடுவர் போதும்போ
தெனச்சொல்லி
கைகாட்டி வேண்டாமெனும்
அன்னதா னத்தனக் கிணையாக வேறில்லை
ஆகையால் அன்னதானமே
அதிகமென் றுசொல்லி வேதமு முறையிடும்
ஆகமம் கொண்டாடுமே!
தென்னவன் கூடலில் சமணரை வென்றவா
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (28)

பாத்திரா பாத்திரம் பார்த்துதவ வேணுமால்
பசுவுக்கு வைக்கோலையே
பகுந்திடும் பாலைக்கொ டுக்கும் பாலையே
பாம்புக்கு நெஞ்சுமகிழ
வார்த்திடில் கொடியநஞ் சுதவுமது போலவே
வாய்மையுள பெரியோர்கள்பால்
வழங்கிடுந் தானங்க ளொன்றுபல வாகியே
வையகந் தனில்நிற்குமே
தூத்திடுஞ் சிறியவர்க் கெத்தனை செய்தாலுமே
தோன்றிடும் பாவகமிகவே
சொல்லுநற் பாத்திரம் அறிந்துபிச் சைகளிடச்
சுகிர்தமும் வளர்ந்தேறுமே

சேத்திடும்[1] புண்ணிய மனைத்தையுந்[2] தந்திடும்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (29)

மன்னரா னவரத கெசதுரக பதாதிகள்
வழங்குவ தவன்செயலல்ல
வழங்கிடும் பொருளதனை மாற்றியங் கவரையும்
வாட்டுவ தவன்செயலல்ல
வின்னமா யொருவன் செயநேரங் களாலவனை
வெட்டுவ தவன்செயலல்ல
வெட்டுமென் றிடும்போதி லொருவர்போய்
மன்றாட
விடுவதும் அவன்செயலல்ல
மின்னுஞ் சடைநாதர் அவரவர்கள் செய்தமுன்
வினையினா லொருவர்போய் மன்றாட
மேவியே செய்விப்ப ரிச்செய லறிந்திடார்
மேதினியி லொருவர்தம்மை
சின்னஞ்செய் தாரென நொந்துவா டிடுவர்காண்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (30)

பொன்தேடி இரவலர்க் குதவாம லுண்ணாமல்ப்
புதைத்துவைத் திடுமேழையும்
பூமியி லெனக்குநிக ரில்லையெனத் தன்னையே
புகழ்ந்துகொண் டாடுவோரும்
நன்றகன் றேதுக்கு மானமரி யாதையும்
நாணமுந் தானிலாதான்
நற்சபையி லேனின்று சாட்சிசொலி நிற்போனும்
நடுக்கஞ்செய் யொன்னலரையே
பின்துடந் திதம்பேசி நண்புற்றி ருப்பாரும்
பெண்புத்தி கேள்ப்போனுமே

1. செத்திடும் என்றுளது. 2. மனத்தைையும் என்றுளது.

பேசிடும் இவராறு பேருமே தமிழ்வலோர்
பேயெனச் சொல்வர்கண்டாய்
தென்றல்மிகு புல்லூரில் வாழ்வீர செங்குந்த
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(31)*

ஈவது மிகுந்திடும் உதாரகுண மானவர்க்கு
எப்பொருளு மேதுரும்பாம்
இயன்றதொரு மூன்றாசை தானுமே விட்டகன்
றிடுதுறவி யானவர்க்குப்
பூவுலகை யாள்பவர் துரும்பதாங் கலையாய்ந்த
புத்தியறி வாளருக்குப்
புகல்கின்ற நாரியுந் துரும்பதாம் வீரர்க்குப்
போர்செய்போ துயிர்துரும்பாம்
மேவியுன் சந்நிதியை வலம்வந்து சடாட்சர
மேதுதிக் கின்றபேர்க்கு
வேறுள்ள பேய்த்தெய்வ மானதெல் லாமொரு
வீண்துரும் பாகுமன்றோ
தேவிபொன் காளியுமை பாதமற வாதமால்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(32)*

வித்தையது கற்றிடா மோடனு மேதுக்கு
மிகுசோம்ப லாயிருப்போன்
மேலான பெரியோர்கள் பால்சென்று நற்கேள்வி
வினவாத அறிவீனரும்
நத்தியே வேட்டகஞ் சேருவோ னளவிலா
நற்பொருளை மிஞ்சியுண்ணான்
நயந்தாசை யாலுமே வேண்டாரை வேண்டுவோன்
ரணகளைத் தாண்டனனையே
சத்துருவி னருகினில்க் காட்டிய வீரருந்
தன்னையே தான்புகழ்வோன்

தான்கொண்ட மனைவிக்கு நெஞ்சுதடு மாறியும்
தனிவிருந் துக்கொளிப்போன்
சித்தரிவை ஒன்பதும் பதரெனச் சொல்வர்காண்
செங்கோடன் மனதினகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (33)

வஞ்சமுள நட்பதும் அஞ்சாமல் எதிர்சொல்லி
வலுப்பேசி இகழ்மாதரும்
மகிழ்தந்தை சொல்வனைக் கேளாத பிள்ளையும்
வலுவுடன் தலைவனுக்கும்
அஞ்சாம லேபங்கு தாவென்ற தம்பியும்
அன்பிலாத் தன்தமையனும்
அறுபாழ் நிலத்திட்ட விதையதும் பயிர்காவல்
ஆக்கிடா வேளாண்மையும்
மிஞ்சுதன் கல்வியைக் கற்றிடா முன்புசொலு
மேதையுங் கைப்பொருளுமே
வேண்டியே இச்சித்த நாட்டினி டைவாழ்வதும்
மிகுகொடிய ரூர்செல்வதும்
செஞ்சொலுரை இவைபத்தும் மனதிட்ட கல்லென்பர்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (34)

சிலைவெண்ணி லாலையஞ் செய்யலாந் தொழுதேத்ததுந்
தேவருந் தானாகுமே
சேவுகன் வாகனம்[1] பொதியுஞ் சுமந்திடுந்
திகழ்புஞ்சை நிலமேயுழும்
மலமும்நாய் பன்றிபசி தீர்த்திடும் பின்பொருள்[2]
வழங்கிடும் யாவர்க்குமே[3]
வயலுழுங் கிடாவது சுமந்திடுங் கழுதைபொதி
மறைவெய்துங் குட்டிச்சுவர்[4]

---

1. சே+உகைத்தவன்=எருதினைக்கொண்ட சிவபெருமான் எனவே எருது எனலாம். ஐயனார் வாகனம் எனில் பொருந்தவில்லை. 2, 3 வரை பொருள் பொருந்தவில்லை. 4. குட்டியச்சுவர் என்றுளது.

உலகத்தில் வீடுசுசி செய்யுந்து டப்பமும்
உதவும்நன் மாநிழலுமே
ஒருவர்க்கு முதவாத உலுத்தர்க்கு நிகராக
ஒப்புமை வேறில்லையே
திலதநுதல் மடமாதர் மால்கொளும் மதனான
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (35)

அரவையுந்துற் சனரையுஞ் சரியதே யெண்ணலாம்
அரவினில்த் துற்சனருமே
அதிகமாம் பாம்புமணி மந்திரம ருந்தினால்
அடங்கிடுந் துற்சனருமே
அறிவுபெறு நல்வார்த்தை எத்தனை யுரைக்கினும்
பலஞாய சாத்திரங்கள்
பலகோடி காட்டினும் வணக்கமும் ஒழுக்கமும்
பட்சமும்கொண் டாடிடார்கள்
விரவுபொல் லாவொருவன் வந்தவர் தமைக்கட்டி
மெய்யெங்கு மேசவுக்கால்
வீசியே காசாரத் தெண்டித்த வர்களையும்
மிகவிடில் வணங்கிடுவர்காண்
திரமாக1 லெட்சுமி குடிகொண்ட மகாயோக
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (36)

அன்னையவள் போலவே பசிவேளை தானறிந்(து)
அமுதூட்டு கின்றபரிவும்
அழகினில்ச் செந்தாம ரைத்திருவை யொப்பதுவும்
அடுமைக்கு வெள்ளாட்டிபோல
இன்னதுக் கின்னபடி என்றுமே புத்திசொல்
இனியமந் திரிபோலவும்

---

1. ஸ்திரமாக - நிலையாக.

இங்கிதகு ணங்களாய்ப் பெருமையில்[1] ப்பூ மாதேவி
இவளெனக் கோபமிலளாய்[2]
மின்னுபஞ் சணையிலே கலவித்தொ ழில்க்குநல்
வேசிதனி லெண்மடங்காய்
மேவியே இவ்வாறு காரிய முள்ளவரை
மிகுகற்பு மாதென்னலாம்
சென்னெல்வயல் நதிசூழ்ந்த புல்லூரி லாதிபன்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (37)

தந்தைதாய் தம்பிமார் மாமன்மைத் துனன்மனைவி
தமையனுட னினஞ்சேர்ந்துமே
தான்கூடி வாழ்வதே வாழ்வதாம் அதுவுமே
தன்மைக்கும் ஒக்குமென்றால்
விந்தையாய்ப் பெருகிவரும் ஆற்றைக் கடந்துகரை
மேவவே வேணுமென்று
மேலான பசுவாலி னைப்பிடித் தேசென்ற
விதமதுக் கொப்பாகுமே
நிந்தையாய் இவர்களை நீக்கிஅந் நியருடன்
நேசமாய் வாழ்வார்க்குமே
நிலையிலாத் தொடுநதி தனில்நாயின்வால்பற்றி
நீள்கரையி லேறலொப்பாம்
சிந்தைமகிழ் வீரசெங் குந்தர்குலம் விளங்கவரு
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (38)

மிகவுந்தி ரட்சியாய்ப் பெண்களைப் பெற்றவர்கள்
வெகுகோப முண்டாகியே
வெய்யபுலி போல்ச்சீறு மனைவித (னாலிகழ்வோர்)
(வெஞ்சொலர்க) ணாளுமூணே

1. பொறுமையில் எனல் அமையும். 2. கோபமிவளாய் என்றுளது.

அகமகிழ்ந் தேயுண்ட பேர்களும் பொல்லாத
அற்பருக் காளாகியே
அவர்தம்மைச் (சேர்ந்தொழுகி நாளுமே
அடிமையாய்
ஆகியே தாமிருப்போர்
இகழ்வாரு மேநித்தந் தாரித்திர மானபேர்
ஆறுபேர் கள்தானுமே
இப்பிறவி தன்னிலே நாசத்தி லேநரகம்
எய்துவர் என்பர்கண்டாம்
செகமெலாங் கொண்டாட வேகீர்த்தி தான்பெற்ற
செங்கோட(ன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே[1] ! (39)

வருடமொரு பதினாறி னட்கற்ற கவ்வியது
வன்சிலை யெழுத்தாகுமே
வண்மைதரு முப்பதுக் குள்ளாக வந்ததும்
வளர்செம்பெ(ா னெழுத்தாகுமே)
பெருமையா மன்பதுள் ளோலையி லெழுத்ததாம்
பின்னெழுப திரண்டுக்குள்
பேசிடுங் காகித வெழுத்தாக மென்பதும்
(பண்பாளர் கூற்றாகுமே)
கருணையுடன் நூறுக்குள் நீர்மேலெ ழுத்ததாங்
கவிபாடம் பண்ணவென்றால்
கருத்துகந் திளமையில் கற்கின்ற கல்வியே
கவியாகு (மவையெல்லாம்)
திரள்சபையி லேநினைத் திடுமுன்வந் துதவுமே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (40)

---

1. ஏடுகள் இதுமுதல் 5, பாதியாக முறிந்துள்ளன.

மேலான பொன்னிநதி பாதளமேபுகுத
விரவவே ஏரண்டமுனியும்[1]
வீரன்முடித்[2] தலையேனு மொருசடைத்
தலையேனும்[3]
வீழ்ந்திடி லடைக்கு(மென்ன)
சீலமுட னேகேட்ட சோழனுந் தர்மமே
செயமென்று மனதிலெண்ணிச்
சென்மமே நிலையல்ல கீர்த்தியே நிலையென்று
திருவலஞ் சுழிதன்(னிலே)
வாலாய மாகவே வீழ்ந்தன னதுகண்டு
மாமுனியும் அதில்வீழ்ந்தான்
மாநிலத் தாகையால் யாவர்க்கு மிதமிகித
வார்த்தைசே ரினிதண்டுக[4]
சேல்கள்விளை யாடுநதி புல்லூரி லாதிபதி
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (41)

மறைவலோன் மாண்ட(வ்)ய முனிவன் வலைஞர்
மதலைபசி தணியவேண்டி
வழங்கிடுங் காசுக்கு மீன்தூண்டி வாங்கியே
மச்சமெல் லாம்வதைத்(ததால்)
குறைதீர முனிவனுந் தூண்டியிட் டேதவங்
கோலுநாள் தன்கணவனைக்
கொண்டிருளில் முட்டிய நளாயினி யைமுனி
கோபமாய் வினவி(யது)
முறையிரவு விடியவுன் தாவியறு மென்னவன்
முற்றிலும்[5] விடியாதென
மொழிந்துசென் றிடமூவர் தேவர்வந்தேயிரவி
முளைக்கவவ ளைக்(கேட்டனர்)

---

1. வரண்டமுனியும் என்றுளது. 2. விரன்முடித் என்றுளது. 3. தலையினுமொருகடைத் தலையெனும் என்றுளது. 4. இத்தொடர் சரியில்லை. 5. முத்தலும் என்றுளது.

(தி)றமைதரு கற்பதுக் கெவருநிக ரன்றுகாண்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (42)

மாசிலொரு மறைமாது மகவுபெறக் கீரியை
வளர்க்குநா ளொருமைந்தனும்
வயத்தில் பிறக்கவும் மைந்தனைத் தொட்டிதனில்
வைத்திலைக் கறி(பறிக்க)
ஆசையொடு தோட்டத்தி லேகமனை யுள்பாம்பும்
அணுகவது கண்டுகீரி
அரவைத் துணித்துக் குவித்தே வளர்த்தாய்க்(கு)
அதுகாட்டி டச்சென்றி(ட)
நேசநம் பாலனைக் கொன்றதென நகுலத்தை
நீக்கியுயிர் மனைபுகுந்து
நிகழ்ந்ததெல் லாங்கண்டு தன்சீவ னைத்தானும்
நீக்கினா ளாதலா(லே)
தேசத்தி லெவையுமா ராய்ந்துசெய வேணுமால்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (43)

மேட்டுக்குள் ளேகளர தாம்நிலந் தன்னிலே
விதைத்த விதைதானுமே
கொண்டியாய் மேய்கின்ற மாட்டுக்க ளித்தவிலை
பொல்லாத வீணர்(சொல்லும்)
காட்டுக்குள் ளேவீசு சந்திரோ தயங்களுங்
கானலில் பேய்ந்தமழையுங்
காராவின் பால்கமர் கவித்தலும்[1] ரற்றினமணி
கண்ணிலார் (பெற்றவதுவும்)
வாட்டடங் கண்வேசி தமாருமே தேடியிடும்
வண்மையு மிகுசெந்தமிழ்

---

1. தெளிவில்லை.

மகிமையது தெரியாத (உ)லுத்தர்பால் சென்றுமனம்
வாடு(வதும் வீணா)ம்புகல்
தேட்டாள னாங்கவிதை வாணருக் கருள்மேகஞ்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(44)*

சீர்மேவு கயிலாச கிரியொன்று மேதுளப[1]
தேசத்தி லொன்றேநலந்
திகழ்வடக் கைந்தெனுங் கொங்கேழு பாண்டிய
(தேசத்தில் பதினான்க)தாம்
தார்மேவுஞ் சோலைசூழ் வரைநாட் டி ரண்டதே
தருசோழ மண்டலத்தில்
சதமுடன்[2] தொண்ணூத்தி யாறென்பர் மலையாள
(தேசத்தில்) பதினைந்ததாம்
ஏர்மேவும் ஈழத்தில் நாற்பத்தி ரெண்டாகும்
எண்ணிக்கை தானுமிருநூத்
தெண்பத்து நாலுசிவ தலமதா மிதுவெலாந்
தரிசனை செய்)தபேர்க்கு
சேருமே புண்ணியஞ் செல்வம்வந் தெய்துமே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(45)*

என்னாளும் வாழ்கின்ற வைகுண்டத் தலமொன்று
இனியபாற் கடலொன்றுமே
இடைநாட்டில் ரெண்டென்ப தொ(ண்டைநா
டதனிலே)
இருபத்தி ரண்டாகுமே
பொன்னிநதி சூழ்சோழ தேசம்நாற் பத்தொன்று
புகழ்பாண்டி தேசமதிலே
புகல்பதி னேழதே (மலைநாடு பதின்மூன்று)
புந்திமகள் வடக்கதனிலே

1. துளுவதேசம். 2. சதளுடன் என்றுளது..

பன்னொன்று துகையும்நூத் தெட்டுத்தி ருப்பதி
பகர்விஷ்ணு தலமாகுமே
பட்சமுட னிதுதினம் நினை(க்கின்ற பேர்க்கெலாம்
பா)வமும் விட்டேகுமே
சென்மமது ஈடேறுஞ் செல்வம்வந் தெய்துமே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (46)

(திருக்)கயிலை சீகாழி தென்மதுரை வடமதுரை
திருமறைக் காடுவேளூர்
திருக்கழுக் குன்றமா ரூர்திருப் புகலூர்
திருக்காஞ்சி கீழ்வேளூர்)
(திருக்)கொருக் கைப்பதி தவத்துறை வலஞ்சுழி
சிராமலை திருக்கணாப்பூர்[1]
திருவாரூர் பெருந்துறை விருத்தாச லந்திருத்
(தெளிச்சேரி திருவன்னியூர்)
திருச்சிர கிரிகாசி சாய்க்காடு மயிலாப்பூர்
திருமங்கலக் குடிபழூவூர்
திருவானைக் காவுநெல் வேலிரத்தி னாசல(ந்
திருக்களர் திருவெண்டுறை)
(திருக்)கோக னந்திருக் காளத்தி வாசனே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (47)

(திருக்)கவுரி மாயபுரி கிக்கிந்த போதுமலை
திருவுள்ள மலைபரியலூர்
சிவமலை திருத்துறைசை சாமிமலை நெய்(த்தானம்
திருச்சேறை கலயநல்லூர்)
(திருக்)கோயில் வைப்பமலை வேதபுரி தஞ்சை
திருப்பனைந் தாள்செங்கனூர்

---

1. கன்றாப்பூர் போலும்.

திருப்பெண்ணை மான்சுரம் (திருத்தென்கு
டித்திட்டை
திங்களூர் திருவையாறு)
(திருத்த)ணி கொடுங்களூர் கேதார மாளப்பாடி
தீர்த்தமலை யண்ணாமலை
திருத்தளங் கதிர்காம முத்தர (கோசமங்கை
திருப்பழனந் திருக்கண்டியூர்
திருநணா திருக்)கோணம் பொதியமலை யின்பூருடன்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (48)

திருச்சோலை நவின்னகும் மங்குடி விராலிமலை
திரிபுவன மல்லிகார்ச்சுனஞ்
சென்னிமலை கருவூர் திருப்பராய்த் துறைதிருத்
தேவகிரி பாவனாசம்
திருப்பாலை மலைகஞ்ச மலைதிருக் கடவூர்
திருச்செந்தூர் திருமலையுமே
திருப்பரங் குன்றமயி லாடுதுறை தக்களூர்
சிவகிரியி ராமேச்சுரந்
திருப்பூந்து ருத்திபட் டீச்சுரங் கடுவெளி
தில்லைவன மல்லித்துறை
திருவாலி கண்டபுரி செய்த்தானம்[1] வெண்காடு
செங்காடு திருவாஞ்சியம்[2]
திருச்செங்கோ டாம்புரி ஈரோடு வாசனே !
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (49)

திருப்பழனி வடமருதூர் வீங்கோண முத்தார்
திருப்படையூர் திருவெற்றியூர்[3]
திருநீலி காவனம் பிராமலை[4] திருப்பூண்டி
திருத்தலையூர் திருவேதி(யே)

---

1. நெய்த்தானம் போலும். 2. வாஞ்சையம் என்றுளது.
3. திருவொற்றியூர்?. 4. பிரான்மலை.

திருச்செந்தூர் குத்தாலம் வாமாத்தூர் பிறகாரூர்
திருச்சுளங் குடிவிரிஞ்சை
திருப்பாதி ரிப்புலியூர் கும்பகோ ணம்மித்திர
தீர்த்தபுரி சுப்பிரமண்ணியம்
திருக்கோப ருப்பதந் தக்கோல முறையூர்
திருச்சோலை மலைவேட்களம்
திருவண்ணா மலையலகு மலைகுடிஙை
முக்கூட)ல்
திருவேர கந்தேனனை
திருக்கடம் பாடவி லகுகூத தளையில்வாசனே
செங்கோடன் மனதிலகாலத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(50)*

திருவாவி னன்குடி சிவசங்க ரன்கோயில்
திருவங்கி னீச்சாமலை
திருவெறும் பீசுரங் கனகசபை மாசிவதை
தெய்வசர வணைத்தடாகம்
திருக்குன்று தோறாடு மண்ணலே நற்சீரா
செப்பரிய கல்லாடகந்
திகளருணை கிரிநாதர் கச்சிக் குருக்கள்தன்
சிந்தையிலும் வையாரிடந்
திருவடி நினைப்பவ ரிடத்திலுமென் னிடத்திலும்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(51)*

ஆதிவா ரந்தனின் வில்வமுக் கிளையதும்
அம்புலி வாரமதிலே
அதிகவெண் துளசியுஞ் செய்தனில் வினாவிலே
அரும்புதன் மாதளையுமே
நீதிசேர் குருவினில் வங்கமும் வெள்ளியில்
நீழ்நாவ லின்கொழுந்தும்
நீலனாஞ் சனியினின் விஷ்ணுகரந் திப்பூவும்
நித்தமுந் தவறாமலே

ஆதியா மரன்றனைப் பூசிக்க வேநினைந்த
அதுவெலாங் கைகூடுமே
அரும்பரவ மகன்றிடும் வறுமைவினை இடர்தீரும்
அதிகதனம் உண்டாகுமே
தீதகலு மிப்படிச் செய்வதே நன்மையாஞ்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (52)

திகழ்சோம வாரங்கள் சதுர்த்திஅட் டமிசதுர்த்
தசியமா வாசிநவமி
செய்யம ரத்தாதி வில்வங்கள் தானெடுத்
திடவுமா காதென்பரே
பகர்சாலை மலைராய ஞாயிறுசெவ் வாய்வெள்ளி
பச்சங்க ளெட்டுடனுமே
பனிரெண்டு பதினான்கு அமாவாசி திருவோணம்
பண்பான விதிபாதமும்
இகழ்வில்வ மாத்தாதி கிராணநாள் துன்பங்களே
கொய்யவொண் ணாதுகாண்
ஈதுநீக்கி யெடுத்துவைத் தோரகலுந்[1] துன்பமும்
இருமூன்று திங்கள்வில்வம்
செகந்தனில் ஈசனை அர்ச்சிக்க வேநன்று
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (53)

பன்னிரு கோடிபல மலர்தரிப் பதிலதிகம்
பதுமமொன் றர்ச்சனையதாம்
பதுமமது சதகோடி சாத்துதற் கேயதிகம்
பகருமொரு நீலோற்பலஞ்
சொன்னநீ லோற்பலங் கோடிக் கதிகமாந்
துதிவில்வந் தானொன்றுமே

---

1. ரனடு என்றுளது.

துன்னுமுக் கிளைவில்வ மைந்துகோ டிக்குமோர்
துளபமே தானதிகமாம்
நன்மைதரு சிவபூசை செய்வதுந் தோத்திரம்
நற்செபந் தியானமுடனே
நவிலேக சமனாகக் காண்டதொன் றுக்கொன்று
லெட்சங்கள் நூறதிகமே
தென்னளகை நிகரான புல்லூரில் வாழ்தீரன்
செங்கோடன் மனதிலகாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(54)*

மச்சமொரு கூருமஞ் சைவமு மிலிங்கமும்
வாமனம் வளர்காந்தமும்
வராகங்கை வர்த்தனம் வைணவம் பவுடிகம்
மார்க்கண்ட மாக்கினேயம்
மெச்சிடும் பாகவதம் காருடம் பிரமமும்
மிகுந்திடும் பிரமாண்டமே
மிளிர்பதுமம் நாரதம் பதினெண்பு ராணமாம்
வேதமொரு நாலிருக்குமே
எச்சான ருக்குயகர் சாமமதர் வணஞ்[1] சிற்பம்
இயல்பரத மனுக்கியானமும்
இனியசா முத்திரி(க)ஞ் சோதிட வாகடம்
இருமூன்று சாத்திரமதாம்
செச்சைநிரை வீரபத் திரர்பாத மறவாத
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(55)*

மகவினைப் பெறுமவர்க் கிடமது கொடுத்திடல்
மருத்துவம் பார்த்திடல்
மகிழ்கின்ற சாதகம் எழுதுதல் விரைதான்
வழங்கல்பிள் ளைப்பாலுமே

---

1. ருக்குவிசரசாமமதகானவணஞ் என்றுள்ளது.

அகம்பரிவ தாகவே வார்த்திடலும் மருந்தும்[1]
அன்புடன் படிப்பவர்க்கும்
அன்னமுட னடங்கலும் சத்திரந் தானுமே
அறுசமயத் தோர்க்குண்டியும்
தகமைநேர் வீடிடந் தந்திடல் வெற்றில்லந்
தனையுமே தான்காத்திடல்
தக்கதொரு முன்னூல்கள் படித்துரை செய்வித்தல்
சாற்றுபிற ருயிர்மீட்டிடல்
செகமீது சிறைச்சோறு சிறைமீட்ட உட(னதே)
செங்கோட(ன் மனதிலகலாத்
திருமருவு) தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (56)

தின்பண்ட மேயுதவல் எண்மணஞ் செய்வித்தல்
சிறந்தகண் ணாடியதுவுந்
தினவதும் அடங்கிட ஆவுக்கு உரைஞ்சுகல்
திகற்சுமை தான்தாங்கியும்
இன்பமுள காவுகள் தண்ணீரின் பந்தல்கள்
ஏரிகுளம் வாவிகளுமே
இதுவதாம் அடைக்காய் வெற்றிலை சுண்ணாம்பும்
இனியபெண் போகமதுவும்
அன்புடன் தலைக்கெண்ணெய் அரவைப்பிணமெடுத்(து)
அடக்கலும் விலங்கூணதும்
அழுக்ககற் றிடும்வண்ணான் நாவிதன் உபகாரம்
அறமெண்ணான் காகுமிதுசெய்
செம்பவள வாயுமை தந்தகும ரேசனே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (57)

ஈராறு வேதியர் சிவமறை யோர்நால்வர்
இயல்மருத் துவரொருவரும்[2]

1. வாநதியும் என்றுளது. 2. மாமாத்தியர் எனல் வேண்டும்.

இருமூன்று மன்னவர்கள் குறுமன்னர் ஐவரே
இதம்பெருகும் வணிகராவர்
காராளர் பதின்மூவர் இடையர்சா தியிலிருவர்
கண்டுமர(பு) அறியார்களே
கருதுமிரு மூன்றதாம் வேடரொடு குயவர்
செக்காருடன் சாணாருமே
பேறான சாலியர் பர(தர்)வண் ணார்பாணர்
பேரிடுங் கடைஞரிவர்தான்
பெரிதாந் தலஞ்செய்த அறுபத்து மூவர்சிவப்
பேறுபெற் றோர்களாகும்
சீர்தரும் இவர்தமை நினைந்தோத முத்தியாஞ்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (58)

திருஞான சம்பந்தர் தண்டீச ரேமுருகர்
சிறப்புலியர் கணனாதரும்
திருநீல நக்கரும் பசுபதி யாருடன்
திகழ்சோ மாசிமா(ர)ரும்
உரைசேரும் அப்பூதி நமிநந்தி கலையரும்
ஓங்குபூ சாலையாரும்1
எழுதுமிவர் பன்னிருவர் மறையவர்களாகுமால்
உயர்சைவப் பெருமாளுடன்2
மருவாரும் நற்சடையர் இசைஞானி புகழ்ந்துயர்3
மன்றுமிசை நால்வராகும்
மறையவர்க ளாகுஞ்சிறுத் தொண்டர்தா னொருவர்
மருத்துவரில் என்பர்முதியோர்
திரளாக வேபேறு பெற்றவர்கள் இவர்களே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (59)

---

1. பூசலார்.
2. புகழ்த்துணையார்.
3. சுந்தரரா?

ஆமேவு குடைசெங்கண் புகழ்ச்சோழ ரரசனும்
அன்பரிடங் கழிமாறரே
அருள்மானி சேரனும் அரசரிவர் ஆறுபேர்
அஞ்சேதித் தலைவர்கூத்தர்
மாமேவு சிங்கர்கழல்ச் சிங்கர்கா டவர்கோன்
வருமைவர்[1] குருமன்னரே
மகிழ்கின்ற இடையரில் திருமூல ரானாயர்
மாதவர் தாமிருவரே
பூமீதி லுயர்காரி கணம்புல்ல ரெறிபத்தர்
புகழ்தண்டி குறும்பருடனே
புகல்ஞானக் குலச்சிறைய ரிவராறு பேருமே
பொருந்துமர பரியாதவர்
தேமேவு முத்தருட[2] பேறுமே பெற்றோர்கள்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (60)

ஏர்தரு[3] கலிக்கம்பர் காரைக்கா லம்மையொடு
இயற்பகை யார்மூர்த்தியார்
இனிதான அமர்நீதி யார்வணிக ரைவரால்
இளையான் குடிமாறரும்
பார்தேர்நா வுக்கரையர் கலிக்காமர் விறன்மிண்டர்
பகர்செறுத் துணையாருடன்
பத்தியுள சத்தியார் கொடுமுனை யடுவார்[4]
பண்புகொள் கோட்புலியரும்
பேர்பெறும் வாயிலார் மாட்டாய்[5] ரேயரும்
பேசுசாக் கியனாருமே
பெரிதான மூர்க்கரும் மானக்கஞ் சாரனார்
பேறுபெறப் பெற்றோர்கள்தான்[6]
சீர்பெருகு வேளாளர் பதின்மூவ ராகுமே
செங்கோடன் மனதிலகலாத்

---

1. வருமை எவர் என்றுளது. 2. முந்தருட என்றுளது. 3. மோதரு என்றுளது. 4. கொடிமனையாடுவார் என்றுளது. 5. அரிவாட்டாயர். 6. போதுபெதபெததொர்கள்தான் என்றுளது.

திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (61)

பாணரில் யாழ்ப்பாணர் செக்காரில் கலியனார்
பரதவரி லதிபத்தரே
பன்னரிய குயவரில் திருநீல கண்டரே
பாருளோர் கொண்டாடினார்
சாணாரில் ஏனாதி நாயனார் நூல்வல்ல
சாலியன் சிவநேசரே
தக்கதொரு வேடரில் உயர்திருக் கண்ணப்பர்
சாற்றிடும் வண்ணார்களில்
தோனுந்தி ருக்குறிப் புத்தொண்டர் கடைஞரே
துதிக்கும்நா ளைப்போகுவார்
சொல்லுமிவர் அறுபத்து மூவர்க்கும் பேறுதவு
சோமசே கரன்பாலனே
சேணாட ராகிய வானோர்கள் தேவனே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (62)

கந்தமிகு மலர்தரும் நந்தவ னங்களைக்
காதலா யுண்டாக்குதல்
கருத்துகந் தம்மலர் பறித்திடுத லதுமாலை
கனிவாக வேதொடுத்தல்
சந்திரசே கரருக்கும் அத்தொடையல் அன்பதாய்ச்
சாத்திடுதல் ஆலயங்கள்
தனையுமே யலகிடுதல் மெழுகிடல் விளங்கவே
(த)யிலநெய் விளக்கிடுதலும்
பந்தபா சங்களைத் தவிரவலம் வந்திடுதல்
பரமசிவ னடியார்க்கன்னம்
படைத்திடுத லவர்க்கேவல் செய்திடுதலவரைப்
பன்னிடுதல் **சரிகைத் தொழில்**[1]

---

1. சரிதைத்தொழில் என்றுளது.

*சிறுமையா மிதுகாண வாகாது மேகங்கள்*
*திரளொலி கரிவீரிடல்*
*நாதங்கள் பேரிகை முரசினது[1] வாத்தியம்*
*நற்பரி முழக்கமதுவும்*
*நவில்வாணர் சத்தமும் இதுதனைக் கேட்கவே*
*நன்மையாங் காரியங்கள்*
*சீதைலட் சுமிமார்ப னானமால் மருகனே!*
*செங்கோடன் மனதிலகலாத்*
*திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே*
*செயமுருக வடிவேலனே !* (71)

*வாரசூ லங்களில் யாத்திரை போமவர்*
*வடக்குநெய் வகித்தலதுவே*
*வளர்கிழக் கசனமும் மேற்குபால் தெற்கெள்ளு*
*வகையாக உண்டெய்தலாம்[2]*
*ஈரெட்டு மேல்வடக் கீராறு தான்மேற்கும்*
*இருபது[3] கிழக்காகுமே*
*இனியதெற் கோரெட்டு நாழிகைசென் றால்ஈசன்*
*எதிர்சூலம் இலையென்பரே.*
*நேராக அதுவன்றி வடக்குதய கிழக்குச்சி*
*நெடுந்தெற்கி னுக்கந்தியே*
*நிசிமேற்கு ஒருநாளுங் கேட்காமல் பயணங்கள்*
*நிச்சயஞ் செய்நன்றதாம்*
*சீர்மேவி நிறைந்தோங்கும் புல்லூரி லாதிபன்*
*செங்கோடன் மனதிலகலாத்*
*திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே*
*செயமுருக வடிவேலனே !* (72)

*தலைமுழுக வேயெண்ணெய் தானிட ஞாயிறு*
*தனிவாழ்வ தேயழிக்கும்[4]*
*சசிபுக ழுண்டாகுஞ் செவ்வாய்தீயக் காட்டிடுந்*
*தரும்புதன் வாழ்வுதருமே*

---

1. முடிசூது என்றுளது. 2. உண்டெய்தலால் என்றுளது. 3.இருப்பது என்றுளது. 4. தேயளிக்கும் என்றுளது.

நிலைபெறுங் குருவினில் குற்றமாம் வெள்ளியில்
நிதிகெடும் ஆகாதுகாண்
நீலனில்[1] வெகுசெல்வ முண்டாகும் இதுவன்றி
நிகழ்கின்ற ஞாயிறுக்கும்
மலர்குருதி மண்குருவில் அருகுடன் வெள்ளியாம்
வாரமும் எருத்துள்களும்
மாத்திட்டு முழுகலாம் சிரஞ்சீவி பேர்சொல்ல
வர்த்திக்கு மாயுசென்பார்[2]
திலதமுதல் மடமாதர் மதனென வருதீரன்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (73)

ஆதிவா ரந்தனில் மூன்றரைச் சாம[3] மேல்
அம்புலிச் சாமமரைமேல்
அங்கார கன்[4] சாம மூன்றதின் மேகமே
அரும்புதன் இரண்டுசாமம்
வேதிய னானகுரு வாரமது தனிலே
மிகுசாமம் ரெண்டரையின்மேல்
வெள்ளியொண் ணரைச்சாமம் சனிசாமமொன்றதின்
மேல்ராகு காலமெனவே
சோதிட நூல்வலோர் மூன்றேமுக் கால்கடிகை
தோஷமென வேயுரைத்தார்
சுபகரு மங்களும் பின்னையொரு காரியந்
தொடுத்திடல் ஆகாதுகாண்
சேதுமுதல் காசிமட் டாகவே கீர்த்திபெறு
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (74)

ஆதிரை முப்பூரம் விசாகமொரு கேட்டையும்
ஆயிலி யம்பரணியும்

1. சனிக்கிழமையில். 2. ஆயுளென்பார்? 3. ஒருசாமம் 3மணிநேரம்.
4. ஆங்காரகன் என்றுளது.

ஏனமும் இதுவெல்லாம் மிகுநதி தடத்திலே
ஏகயாத் திரைபோகலாம்
எய்திய காரியங் கைகூடும் நன்மையாம்
என்றுபெரி யோருரைத்தார்
தேனவிழ் கடப்பமலர் மாலையணி மார்பனே !
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (67)

காகமுடன் நரிபுலி கிளிப்பிள்ளை யுள்ப்பரி
கரிபசுக் கோழியுடனே
கழுகுடன் செம்போத்துப் பச்சைமயில் அன்னமும்
காணாவுந் தானாகுமே
வாகுள்ள வெண்கொக்கு எரும்புநடை தாரையும்
வளர்நாரை பச்சோந்தியும்
மந்தையில் அடைக்கின்ற ஆடுகள் நீர்மச்சம்
மகிழ்வதாய் இவைகள்வலமாய்
போகவே யாத்திரை யேகலாம் நினைத்தெண்ணிப்
போனதொரு காரியங்கள்
பொருளுடன் கைகூடும் என்றுமே தமிழ்வலோர்
போதவே தானுரைத்தார்
தேகபுண் ணியனான மகாயோக பாக்கியன்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (68)

தவசிசன் னாசியும் குருடன்செக் கானுமே
தலைவிரி தலைமொட்டையும்
தச்சனுங் கொல்லனும் நாவிதன் குயவனும்
தருமொற்றைப் பார்ப்பானுமே
நவபாண்ட மும்விறகு தட்டைக்கட் டெண்ணெயும்
நலமிலா நோயாளரும்
நடுக்கிடுங் கால்கையர் குட்டநோய் ஈழைநோய்
நாசியறுப் புண்டோர்களும்

அவமங் கிலிமுலை யில்லாள்வெ ருங்கும்பம்
அக்கினி புதுக்கோடியும்
யாத்திரை போமவர்க் கெதிராக வேவரில்
ஆகாதெ னச்சொல்லுவார்
சிவனுடைய புத்திரனே! செங்கண்மால் மருகனே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (69)

அந்தணரு மேயிருவர் சூலிநிறை வானகுடம்
அடிசில்மார் சுபமங்கிலி
அறியசிறு பாலகர் பால்தயிர் நெய்க்குடம்
அமுதுவண் ணானமுக்கும்
மந்திரகு டங்கனி வெள்ளைப்பூ வேசியர்
மைந்தரை யொடுக்கிவருவார்
வளரிளங் கன்னியர் நெல்சுமை புல்சுமை
மலராங்க ரும்புச்சுமை
உந்திவரு சிங்கமும் பசுக்களும் திருவிளக்கு
உயர்முரசு சங்கிறைச்சி[1]
ஊர்வழி போகின்ற பேர்தனக் கெதிர்வரின்
உண்மையாய் மிகநல்லது
சிந்தைமகிழ்ந் தெய்திய காரியங் கைகூடுஞ்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (70)

யாதொரு காரியம் நினைத்துமே ஊர்வழி
யாத்திரை போம்போதுமே
பூனையது[2] மேயிடல் தும்மலும் பெருமழை
அடமழை தான்தூரலும்
தீதான கல்லிடரல் எங்கேபோ றாயெனல்
செப்பிடுதல் நாயெச்சிலும்

---

1. சங்கிரச்சி என்றுளது. 2. ஆனையது என்றுளது.

*சிந்தைகொண் டிதுசெய்வோர் சிவலோகம் அதுசேர்வர்*
*செங்கோடன் மனதிலகலாத்*
*திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே*
*செயமுருக வடிவேலனே!* *(63)*

*மிகுந்த வர்க்கங்கள் அகில்மணப் புகையுடன்*
*விளங்கிடுந் தீபவகையும்*
*மேலான புனிதமார் திருமஞ்ச னங்களும்*
*வீசுநறு நன்மலர்களும்*
*மகிழ்வாக வேகொண்டு மாய்கையின் குணமின்றி*
*வகைசேரும் ஐந்தாகிய*
*மாசுத்தி தான்செய்த தம்புறம் இறைஞ்சியும்*[1]
*வன்னியின் கருமமுதவி*
*தகமைபெறும் அருள்வழியில் கிரிகையென் னுந்தொழில்*[2]
*தயவுடன் செய்வோர்களே*
*சந்ததம் சிவனருகு இருப்பரென வாசகஞ்*
*சதுர்வேத முறைசெய்யுமே*
*செகமேழு மேபணியும் அலைவாய் மலைக்குமரன்*
*செங்கோடன் மனதிலகலாத்*
*திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே*
*செயமுருக வடிவேலனே !* *(64)*

*முக்குணந் தன்னையும் ஐம்புலன் களையுமே*
*மொழியாதி ஐந்தடக்கி*
*மூலவாய் வதனையும் அனைத்துமப் பாலந்த*
*முயற்சியா யிருவிழிதனை*[3]
*சிக்கென வடைத்துநடு வளிசென்று தாண்டவச்*
*சிலம்பொலி யடைந்துகேட்டுத்*
*திகழஞ்செ ழுத்தையு மோரெழுத் தாய்க்கண்டு*
*சிவனாத பரவொளியிலே*[4]

---

1. செயதகம்புறமிறஞ்சியும் என்றுளது. 2.கிரிகையெனறொழித் என்றுளது. 3. யிருவழிதனை எனல் பொருந்தும். 4. பரவெளியிலே எனல் பொருந்தும்.

மிகவா யழுந்தியித் தன்மைதெரி சித்தருள்
மேவிடும் **யோகம்** முயல்வோர்
வேட்டுவ னெடுத்தபுழு அதுபோல விளங்கியே
விமலசா ரூபமுறுவார்
திக்குளோர் பணியும்அலை வாய்மலைக் குமரனே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (65)

விரிந்திடும் புராணகலை ஆகமப் பகுதியும்
விளங்குபர சமயங்களே
மேவுபல சாத்திர மொடுசகலமு மாராய்ந்து
மேன்மையதில் முப்பொருளையே
தெரிந்தும் பொருள்தனைத் தெளிந்துவுல கத்தில்நீ
சிற்றறி வனைத்தும்நீக்கித்
திகழுமவ் வறிவுபோற் சிவலோக ஞானமே
தேர்ந்துதெளி கின்றநெஞ்சம்
புரிந்திடுதல் **ஞானமாம்** இதுவுளோர் சிவனாவர்
பொருவின்நான் மறையுமயனும்
பூதலத் துள்ளோர்கள் தேவர்முனி வோர்களும்
பூமாது கலைமாதுமே
திருந்தவே பணியும்அலை வாய்மலைக் குமரனே !
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (66)

மானுட நாகமும் முயல்கீரி சாரையும்
வானரம் எலிதானுமே
வளர்கருடன் ஆந்தையும் கூகையூர் அட்டையும்
வால்நெடுங் கரிக்குருவியும்
பூனையுடன் மூஞ்சூறு சிறுசிட்டுக் குருவியும்
பொறிமிகு சிறுகாடையும்
புனந்தனி லிருக்கின்ற உடும்புகோட் டானுமே
போதவே குலைக்கின்றநாய்

அக்கினி பிறந்தநா ளானதொரு கார்த்திகை
அதிகசித் திரைச்சதயமும்
சோதியுட னேவாரம் ஞாயிறு குசன்சனி
தோன்றிடும் பக்கங்களில்
துன்னிய சதுர்த்தியும் சஷ்டியும் நவமியும்
துவாதசி யுங்கலந்தால்
மாதனங் கொடுத்திட நோய்கொண்டு பாயலில்
மருவியே படுத்திடவுமே
வழிநடந் தூர்வழி போகலா காதென்ன
மகாகணித ரேயுரைத்தார்
சேதுமுதல் காசிமட் டாகவே கீர்த்திபெறு
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (75)

செங்கதிர்ப் பரணியின் திங்கள்சித் திரையுமே
செவ்வாயும் உத்திராடம்
திகழ்புத னவிட்டமும் பொன்னவன் கேட்டையாஞ்
செயவெள்ளி பூராடமாம்
மங்குசனி ரேவதி கிழமைகள் பிறந்தநாள்
வந்துசேர் திங்களதிலே
மணமது முடித்திடில் விதவையாம் பெண்திரளில்
மலடியுந் தானாவளே
பைங்குழவி தானுமே பிறந்திடில் இறந்திடும்
பகர்வழி நடக்கொணாது
பாருளோ ரிதுகளில் சோபனக் காரியம்
பண்ணவும் ஆகாதுகாண்
திங்கள்குரு புதன்வெள்ளி நோக்கிட நன்மையாஞ்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (76)

ஆடிமா தத்திலே இராவணன் பட்டதாம்
அதிகபா ரதம்மார்கழி

அரனுமே நஞ்சுண்டது மாசிமா தத்திலே[1]
ஆனியாந் திங்கள்தனிலே
நாடிடுங் கஞ்சனும் இறந்தனன் பங்குனி
நரகாமன் எரிபட்டனன்
நவில்புரட் டாசிதனில் இரணியன் இறந்தனன்
நவிற்றுமித் திங்கள்தனிலே
வீடுகோ லிச்செயலும் மனைகுடி புகுந்தாலும்
வெற்றியும் மேவிடாது
வீறுசெல் வங்களுயிர் மாடுபோ மென்னவே
விளம்பினார் சோதிடர்களே
தேடிடுங் கீர்த்திநிதி தியாகப்பிர பலனான
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (77)

சித்திரையில் ஈரைந்தில் கடிகையு மைத்தாஞ்
செவ்வெளு மூன்றாகிய[2]
தேதியில் கடிகையும் எட்டதாம் ஐப்பசி
திகழாடி பதினொன்றிலே
உத்திடுங் கடிகைரெண் டாகுமே ஆவணி
ஓராறில் கடிகைநாலைந்(து)
உடனிரண் டாகுமே கார்த்திகை எட்டினில்
உயர்கடிகை ரண்டாகுமே
எத்திசை கொண்டாடுந் தையுமீ ராறிலே
இருநான்கு கடிகைமாசி
இருபதில் கடிகையும் எட்டிலே வாஸ்துவும்
எழுந்தருளும் நாளுதனிலே
சித்தமும் மகிழ்ந்துமனை கோலநன் றாகுமே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (78)

1. மாஷத்தையில் என்றுளது. 2. செவ்வேளுமுனகிய என்றுளது.

வீடதுமு கூர்த்தமது செய்கின்ற போதுநீர்
மிகவலம்[1] வரவாழ்வதாம்
மேவியிட மேவரில் பகையதாஞ் செங்கலும்
மேவிடில் பொன்சேருமே
நாடிடுஞ் சிப்பிகல் வேர்காண மிகவுண்டு
நறும்புழுவு மயிர்காணவே
நன்றலச் சாம்பல்தோ லெலும்பது கண்டிட
நடுக்கமுற் றிடுமென்பரே
ஓடுகரி காணவே தீப்படும்[2] வண்டுடன்
ஊரானை பூரானுமே
ஓதிடும் பல்லியுஞ் சிலந்தியது கண்டிடில்
உத்தமம் உடும்பாமைதேள்
தேடான எலிகாண மத்திபம் மனைகோலச்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (79)

மனையகல மூன்றுடன் ஆறேழு பத்தாகும்
வளர்நீளம் அடியொட்டுமே
வருவது பதினொன்று பதினைந்து பதினாறு
மகிழ்தரும் பத்தொன்பதும்
இனஞ்சேரு மிருபதும் இருபத்து ரெண்டுமே
இருபத்தேள் நாலேழுமே
இருபத்தி யொன்பது முப்பது முத்தம்[3]
இடுகின்ற சுவர்ப்படையுமே
கனமான கையது[4] ரெட்டைப்ப(ட) லாகாது
கையழுந்த வைத்ததுதனை
கருதிமறு படியிறக் கிக்குரைத் திடுவதுங்
காணில்நன் றல்லவென்பார்
தினகர னெனக்கவி வாணரிருள் நீக்கிடுஞ்
செங்கோடன் மனதிலகலாத்

---

1. மிகவஸம் என்றுளது. 2. தீயப்படும் என்றுளது. 3. முற்றம் (வாசல்) 4. கையயது என்றுளது.

திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (80)

தன்னுடைய பேர்ராசி வலமதா யிருக்கமனை
தான்கோல மிகநன்மையாம்
சாத்துமிட மாகாது வீடுநடு வினில்வாசல்
தனைவிடக் குடியோட்டுமே
சொன்னதொரு வலமைந்து இடம்நாலு பங்கில்நடு
சுகமாகும் வாசல்விடலாஞ்
சொல்லும்வா சல்க்கெதிர தாகவே கால்கம்பம்
தூண்களும் நிறுத்தொணாது
எந்நாளு மேகதவு போடவும் வலியன்சாத்
திடிலகம் பாழாகுமே
எங்கேநி றுத்திட லங்கேநின் றேகதவு
சாத்தவே வெகுவாழ்வதாம்
தென்னைமர முங்கதலி கன்னல்செறி புல்லூரில்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (81)

மனைக்குக்கி ழக்காக அடுக்களை பொக்கிஷம்
வைத்திடத் தென்கிழக்கு
வளரும்ப சுப்பட்டி தெற்கிலே குப்பையும்
வருதென்மேற் குயர்தோப்புமே
கனக்கவே பால்தரும் எருமைகளை மேற்குமே
கட்டவே வடமேற்கினில்க்
கதிக்கவே நெல்சேரும் வைக்கலாம் வடக்கினில்
கனிவாக உள்வீடுமே
மனத்தாகந் தீர்ந்திட நீர்தரும் உறைகிணறு
வடகிழக் கதுவாகுமே
மகிழ்வாக இப்படிச் செய்துகுடி யிருக்கவே
வாழ்வுமிக உண்டாகுமே

சென்னிக்குள் நாள்பழகு[1] கனகத்தி யாகந்தருஞ்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (82)

எருக்குடன் அகத்தியும் நெடும்பனை முருங்கையும்
எண்ணெய்தரும் ஆமணக்கும்
இதந்தரும் நவ்வலும் பருத்திமுள் மரங்களும்
இனிதாகும் நெல்லிமரமும்
முருக்கமரம் உதியமரம் இதுவெல்லாம் வீட்டுக்கு
முன்னாகில் அரிதாகவும்
முளைத்துமே நின்றிட லாகாது அதுகாண
மூதேவி தானடையுமே
நெருக்கிடும் வினைகளும் செல்வம்போம் மரணமுறும்
நிசமென்று தமிழ்வலோர்கள்
நிகழ்த்தினார் யானைமுக விநாயகர்க் கிளையவா
நித்தியகலி யாணவேலா!
திருக்கையொரு பனிரண்டு முகமாறும் உள்ளவா
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (83)

அரசெருக் கெலையுடன் முருக்கிலை வன்னியிலை
ஆமணக் கிலைதானுமே
ஆலிலை தாமரை செந்தாழை இலையிலும்
அமுதுண்ண லாகாதுகாண்
புரசுமா விலைபலா விலைதாழை தென்னிலை
புன்னையின் காஞ்சியிலையும்
புகழ்வாழை இலையும் நாவலிலை
தனிலுண்ணலாம்
பொற்பள்ள யத்தைநிகரே

---

1. செனனிககுளனாளபளகு என்றுளது. சென்னிகுளமோ என்பது ஐயம். ஈண்டு எதுகை நோக்கி செனனி எனப்பட்டது.

உரைசெயும் வேம்புபல் லொளிவதாம் ஆலுக்கும்
உயர்செல்வம் உண்டாகுமே
உறுதியாம் பல்வேறு பூலுக்குப் போகங்கள்
ஓங்கிடும் நாயுருவியை
தோணவசீ சுரமுமுண் டாமுறுபல் தீட்டினால்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (84)

சவனமே[1] சொல்கின்ற பல்லிவிழு தோடங்கள்
தலைதனில்க் கலகமாகும்
சண்டைகளும் உண்டாகும் உச்சியில் விக்கினம்
தரும்உறவு வருனுதலிலே[2]
புவனமகிழ் நன்மையாம் கண்ணிமைகள் துக்கமாம்
புருவங்கள் அதரத்திலே
போக்கிடுஞ் செல்வமது நாசிவினை சேருமே
பொருள்நாசம் இருகண்வலச்
செவியினில் பாக்கியம் இடதுசெவி தனில்துக்கம்
திகழ்பிடரி வெகுதுக்கமாம்
தின்னமக ளிடப்புயம் வலப்புயமும் யோகங்கள்
செயம்பெருக உண்டாகுமே
சிவசுதர் கணபதித் துணைவனே காளிதரு
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (85)

மாசமுலை[3] மீதிலே பாவமாம் விருந்துண்டு
வயர்தனில் உந்திதனிலே
மகிழ்போக முண்டாகு முதுகினில் கூட்டுறவு
வலதுபால் மிகுதோஷமாம்
சீசபே றாகுமாடை வருமிடது முதுகதனிலே
தீமையாம் அடிவயத்தில்

1. சகுனம். 2. நெற்றியிலே. 3. மாசபுமுலை என்றுளது.

திகழ்குய்ய மதுபோகம் நட்டமாம் துடைதனில்
சீர்போக வானரங்கள்[1]
சேருமே முன்கால்வி லங்குண்டு கொண்டையில்
செலங்[2]கணுக் கால்நடையினில்
திரிந்திடுவர் கானகம் பேவர்தீங் கெய்திடுந்
திகழ்புறங் காலில்வீழ்ந்தால்
தேரு[3]வோர்க் கிவையெலாம் பல்லியி னிலக்கணஞ்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (86)

பலசெல்வ முண்டாகு முள்ளடி வலமுன்கை[4]
பணிசேரும் இடதுமுன்கை
பழிதீமை யுண்டாகும் வலமான உள்ளங்கை
. ரத்னலா[5] பங்களுண்டாம்
சிலவாகு மிடமான உள்ளங்கை திரவியம்
தீந்திடும் வலப்புறங்கை
வெகுதானி யஞ்சேரு மேசென்னி மயிரில்த்
துலையாத பயமதாகும்
பல்லியோ ணான்வீழ்ந்த தோஷங்கள் போகவேண்
டிற்றுக ளற்றகாஞ்சி
நகருயர் வரதரா சர்பெயர் (நாளுமே)
சொல்லித்து தித்திடுவரே
திலதநுதல் மடமாதர் மதனென வருதீரன்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (87)

சம்பாவின் நெல்அரிசி மெய்தனக் கேசுகம்
தந்திடும் பிலனுமுண்டாம்
தக்ககா ரரிசியும் மந்தமாம் கனக்கச்
சடலமது வேபெருக்கும்

---

1. மரணங்கள் எனல் பொருந்தும். 2. செயம் எனல் பொருந்தும். 3. தேரிரு என்றுளது. 4.யில்லைமுன்கை என்றுளது. 5. ரத்தலா என்றுளது.

வம்பாம் கரப்பானும் வாயுவொடு தினவுண்டு
வரகுவா லான்சோளமும்
வயறெரிவு பித்தம்பே திக்குமே கரப்பானும்
வாயுவுந் தானாகுமே
கம்புவகை[1] மூன்றிலரி சிக்கம்பு மிகவாய்வுக்
கரப்பான் கருங்கம்புகள்
கனபெருங் கம்புங்கு ளிர்ச்சியென் றேநல்ல
கவிவலோர் தாமுரைத்தார்
செம்பவள வாயுமையள்[2] தந்தகும ரேசனே
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (88)

சாமையது சன்னியும் பித்தமும் சேராது
சகலருக்கு மாரோக்கியம்
தகைமைபெறு தினைபித்த[3] மீதெரி வுக்குணவு[4]
சார்துதிகேள் வரகுவெட்டை
ஆமெனு மூலமுளை யுண்டாம் மலங்கட்டும்
அருள்பெருகு நீராகரம்
அனலான பித்தமும் வாதங்கி ரந்தியும்
அதிகமாய் வருசோகையை
போமெனத் தள்ளியும் ஒத்தது வர்த்திக்கும்
பூவைதன மேசுரக்கும்
பொருந்தவே மாமது[5]ர முண்டாகு
மெனச்சொன்னார்
புகழ்வயித் தியநூலினோர்
தீமைபெறு சூரர்தமை வென்றசே னாபதி
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (89)

1. சம்பவகை என்றுளது. 2. ளயமையள என்றுளது. 3. தினபித்த என்றுளது. 4. மீதெவுருக்குணவு என்றுளது. 5. மாதிர என்றுளது.

முருங்கையிலை மந்தமாம் சாரதா ரோக்கியம்
மோகபோ கங்கள்மிகவும்
உண்டாகு மேகாய்க்கு பூக்கள்கு ளிர்ச்சியாம்
முதிர்ந்தவேர் பட்டையதுதான்
(வ)ருசன்னி திரிதோஷம் வீக்கமது தீர்த்திடும்
வாய்வுமறும் ஈர்க்குமேதான்
வளர்கரைக் காய்வாத சோபங்கள் தீர்க்கும்இலை
மகிழ்பித்த மும்வருகுமே
(அ)ருந்தக்கொ ழுந்துதிரி விதமான தோஷமும்
அகற்றிடும் பலகீரையே
அமுதுசெரிக் குமேமுயல் பித்தசேத்தும்வாதம்
அத்தனையும் விட்டேகுமே
(தி)ருந்துமலை வாய்மலைக் குமரகுரு1 தேசிகா
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(90)*

அறைக்கீரை காய்ச்சல்குளிர் சன்னியைத் தீர்த்திடும்
அருந்தவே மலசுத்தியாம்
ஆர்க்குமித மானருசி வாய்ந்த கறியாகும்
அரியபொன் னாங்காணி
திறம்பெறும் பெலனுண்டு குளிர்ச்சியாங் கண்ணுக்கு
தீனிபசி தோணாதுகாண்
செகமீது நல்வேளை குடல்வாதங் க(ளையுமே)
(தூதுவே ளைக்கீரை)
பிறக்குமுயர் குன்மமும் தீர்ந்திடும் நற்பாரி
பித்தமொடு கல்லெரிப்பு
பேசரிய நீர்க்கட்டு ரோசிகம் தானறும்
பி(ரியமாய்த்) தானுண்ணலாம்
சிறுகீரை குளிர்ச்சி கனபத்தியக் கறியாகும்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(91)*

1. வார்முலைக்குமரகுரு என்றுளது.

முத்திடுங் காய்பித்தம் அனல்சேத்து மஞ்சேரும்
ஒழிந்ததொனி யேகொடுக்கும்
ஊதிகரும் நோய்கரப் பனுக்கா காதெனச்
சொல்வர்முதி ரு(ம்புலவோர்)
கத்தரிக் காய்தனைத் தின்னவே சுகமதை
காட்டுமே நற்புடலதின்
காய்நாவு ரசமதாம் பித்தரே ததுமறும்
கடுநோயு மாகா(துகாண்)
பித்தங்கள் மிகவுண்டு பலமருந் தினையெலாம்
பேதங்கள் தான் செய்யுமே
பேசரிய புண்ணோய்கள் கரப்பானுக் காகாது
பிணி......... ......................
சித்தர்கள் பரவுமலை (அலைவாய்க்) குமரனே!
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (92)

படரும்ப ரங்கியிலை காய்களுங் குலையெறிவு
பயித்தியஞ் சேர்குன்மமாம்
பசிசீவ னம்போம் நெஞ்செரியும் ஆகாது
............. ....................
அடவுடன் பொசிக்கின்ற அமுதுசெ ரிக்குமே
அருந்திடும் மருந்துதனையும்
மதிக்குண மேகெடுத் திடும்வாதங் கதி.......
................. ...............
வடுவான நெல்லிக்காய் பித்தமுஷ் டணமுள்ள
வளர்மோக மும்போக்குமே
வாதமுறு மேபுளிப் பானகா யிதுவதாம்
வருகெ........ ..............
திடமுடைய மனவீர செங்குந்த குலதிலத
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (93)

வண்மைதரும் வாழையின் கனிகரப் பான்தினவு
மாந்தமது உண்டாகுமே
வாதமுட னேபித்தஞ் சேத்துமம் சேர்ந்திடும்
............... ......................
பண்பான தித்திப்பு மாம்பல்பிணி கரப்பான்
வாதமொடு பித்தங்களும்
பகர்கின்ற சேத்துமம் நோய்வினையும் விளாங்கனி
.................. ...............
எண்ணரிய தாகந்த ணித்திடும் தேகமதுக்(கு)
இதவாத தீபனமுமாம்
எக்கனி தனக்குமே மேலான கனியென்ன
விளம்பினா(ர்) (வித்தைவல்லோர்)
செண்பகப் பூவனைய மேனிமட மாதர்வேள்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (94)

(சூதந்த) ருங்காய் கிரந்திநா விரணமும்
தோற்றிடும் வாயிருமலும்
துண்ணுகா சங்கள்கா மாலைகண் ணோவுடன்
சூலைகால் பித்தவெடிப்பாம்
(வாதங்கள்) சேர்தினவு பாதிதா னுண்டாகும்
மாங்கனி பித்தமுயரும்
மந்தமும் சீதமும் வீக்கமுடன் அங்கத்தில்
வரட்சிபல் நோயணுகுமே
(தீதகலு) மாம்வத்தல் வயத்துக்க டுப்புளலை
செவிநோய்க ளுயர்பித்தமும்
திகழ்வாத மேயூது பாண்டுமிகு தாபமுஞ்
செப்பரிய வெக்கைமுதலாம்
(சீதமு)ட னேபேதி தீர்த்திடு மெனச்சொன்னார்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே ! (95)

(பேராக) மேகருங் காய்வாத பித்தமும்
புண்ணோய் கிரந்தியுழலை
போதவே பலநோய்கள் சேருமே பழம்புளிகள்
புகழ்வாத பித்தமதுவும்
(வாரான) திரிதோஷ ம் சூலைகுய்ய ரோகமும்
வருரண தோஷமறுமே
வண்மைமிகு சீரகம் காய்பிலன் கண்குளுமை
வன்குன்மம் பித்தமகலும்
(மோரா)ன ளல்வெக்கை சயித்தியந் திரிதோஷம்
மிகுகுன்மம் உஷ்ணமுமே
மீறிய கழலைநோய் நீர்க்கடுப் பானதும்
விட்டேகும் உடல்க்கிதமதாம்
(சீரான) வாணர்புகழ் வீரசெங் குந்தகுல
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (96)

(வருப)சுப் பாலுமுள் பித்தமதை யேபோக்கும்
மெய்சிவந் திடும்பசும்பால்
மெய்யிலுள்ள வாதங்கள் எல்லாம் அகற்றிடும்
வெகுரசனை தருமெவர்க்குமே
(பெரு)மைபேறு காராவின் பால்காசம் நீக்கிடும்
மகிழ்கபிலை யின்பால்களும்
வளர்திரி தோஷங்கள் போக்கிடு மெருமைமோர்
மகாசோகை காமாலையும்
(நறுக்க)துவி லாச்சலக் களிச்சலுந் தாகமும்
நவில்பாண்டு கிராணியறுமே
நற்புவி யோர்க்கமுத மூவர்மருந் தென்னவே
நாவலோ ருரைத்ததிதுவே
(திருவான) மகாமேரு சமானமா மிகுதீர
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! (97)

(காக்கின்ற) மங்கையர் தனந்தரும் பாலுமே
கண்ணினுக் காகுமென்பார்
காச்சல்திரி தோஷங்கள் சன்னிக்கு மாகும்
காதல்தரு சில்ப்பிமுலைதான்
(மாக்க)லைப் பாலுமே திரிதோஷ மதுபோக்கும்
வளர்தேங் கிளனீருமே
மாறாத தாகங்கள் பித்தங்கள் தீர்ந்திடும்
ஆற்றுநீர்க் கடுப்புமேகம்
(தாக்க)ாது வர்த்திக்கும் இஞ்சியின் குணமது
தருவாத இருமலீளை
சாத்தரிய சூலையுங் கபாலரோ கங்களுந்
தளர்சோபந் தான்தீருமே
(தாக்கி)ரைப வானியருள் குமரகுரு பரனருள்
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(98)*

(தூ)துவளை பேய்ப்புடல் ஒழியவே கைப்பெலாஞ்
சொல்லரிய பித்தமெனலாந்
துன்னிநெல் லிக்கனியும் ஒழியபு ளிப்பெலாந்
தோன்றிடும் வாதங்களே
(தாது)கற் றேன்ஒழிய தித்திப்பெ லாம்மிகுஞ்
சேத்துமந் தானாகுமே
சேமற்கு மிஞ்சாவெலை குறும்பாடு பன்றியுந்
திகள்கொள்ளு சரிகரடியும்
(பே)ாதவே முதல்வருடத் தவரைபா கல்க்காயும்
புனகோழி பசளைதனையே
பொருந்தியே உண்டிடில் தின்றிடும்
மருந்தெல்லாம்
போக்கிடும் பத்தியம(தே)
(சே)துமுதல் காசிபரி யந்தமும் பு(க)ழ்கொண்ட
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(99)*

… … …… … …. …வுண்டான நீர்நோய்க[1] ளேசேரும்
பகரோடைச் சுனையூரலும்
பலபிணி குடல்வாத மிகவுமுண் டாகுமே
பண்புதவு மாரிபொழிநீர்
…… …. ……. …..த்தங் கண்டுசறு கூறிவந்த
தண்ணீர்சு ரந்தானுமே
நிறைந்திடுங் குளிர்ந்தநீர் சன்னிகுடல் வாதமுடன
நொந்துட்(னம்) விளைந்துவிடுமே
… …யனங்க டுத்திடும் வயறுமே பொருமு
மிகுந்திடும் மலபந்தமாம்
விளங்கிய கிணற்றுநீர் குளிர்காலத் துட்டினம்
வேடையில்[2] குளிர்ச்சிதருமே
… … …தில்க் காய்ச்சியநீ ருண்ணவினை யணுகாது
செங்கோடன் மனதிலகலாத்
திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே
செயமுருக வடிவேலனே! *(100)*

(வ)டகயிலை மலைமேலி ருந்திடும் பண்பதனை
மாத்தியிப் புவிமீதிலே
வந்துமான் மழுவபயம் வரதகைத் தலமாத்தி
மருவுமிரு கைத்தலமதாய்
(வி)டகண்ட மும்நெற்றி விழியுமே சுடரொழுகு
வேடமத கற்றிடுமனித
மேனியாய் வந்தாண்ட மருள்சித்தய் யர்பாத
மென்மலர் மறந்திடாத
(அ)டியவன் முத்துக்கு மாரனா கியநாயேன்
அறிந்துமறி யாமலெனினும்
அன்பாய்மொ ழிந்ததமிழ்ச் சதகம்நூ றையுமிக
அன்பாகக் கொண்டருள்வாய்

1. தீரநோயக என்றுளது. 2. கோடையில்.

*(திட)முடைய பன்னிருகை ஆறுமுக தேவனே!*
*செங்கோடன் மனதிலகலாத்*
*திருமருவு தெய்வானை வள்ளிமண வாளனே*
*செயமுருக வடிவேலனே!* *(101)*

*பார்த்திப வருடம் சித்திரை மாதம் 17ஆம் தேதி (27-4-1825) புந்தி வார நாளும் நவமியும், மக நட்சத்திரமும், மேஷ ராசியும் கூடின சுபதினத்தில் நாழிகை உதித்து 2-க்கு மேல், முத்தையன் பாளையத்திலிருக்கும் காத்தியாமுன்*[1] *குமாரனாகிய வெள்ளையனுக்கு வடிவேல் சதகம் எழுதி முகிந்தது முற்றும்.*



1. காத்தியாமுடன் என்றுளது (மூப்பன்?)

# வடிவேல் சதகம்

## கருத்துரை

### 1. வான் சிறப்பு

அழகுபொருந்திய தெய்வானை, வள்ளிநாயகி ஆகியோரின் மணவாளனே ! வெற்றிதரும் முருகனே ! செங்கோடன் மனதில் எப்பொழுதும் வீற்றிருக்கின்ற வடிவேலனே !

கருமேகம் மழை பொழிவதும், உலகில் அதிட்டம் வருவதும், ஆண்மையின் உயர்வு பெறுவதும், பூமி நல்ல விளைச்சலைத் தருவதும், புகழும், நல்வாழ்வும் தருவதும், எல்லாக் கலைகளையும் கற்றுப் புலமை எய்திக் கவிவாணர் ஆவதும், சொன்னசொல் தவறாது சொல்லுறுதி தருவதும், பகைமன்னரை வெல்லுகின்ற போர்வீரம் தருவதும், மனை, மக்களைத் தருகின்ற எட்டு இலக்குமிகளும் பொருந்தி இருக்கின்ற சிறப்பைத் தருவதும் மாரியாகிய மழையின் மகிமையினாலேயாம்.

### 2. இறையன்பு வேண்டும்

முருகன் திருவடிகளை மறவாத, காளி என்பாரின் வழித்தோன்றலாகிய செங்கோடன் மனதில் உறைகின்ற வடிவேலனே!

உன் திருவடிக் கமலங்களிலே அன்பில்லாதவர்கள் மேல் சாதியில் பிறந்தென்ன? பல வித்தைகளையும் கற்றென்ன? சிறந்த வணிகனெனப் புகழ்படைத்துமென்ன? கோலாகலமாக ஆடம்பரத்துடன் வாழ்ந்துமென்ன?

பெண்கள் மோகிக்கும் மன்மத அழகைக் கொண்டிருந்தும் என்ன? குபேரனைப்போல் பெருந்தனக்காரனாய் வாழ்ந்துமென்ன? இன்சொல் உரைத்தும் என்ன? குதிரை யானை முதலானவற்றின்மேல் ஏறிச்சென்றும் என்ன? உலகனைத்தும் ஒருகுடைக்கீழ் ஆளினும் என்ன? (பயனில்லை)

## 3. அழகுகள்

குளிர்ச்சி பொருந்திய குளங்கள் சூழ்ந்த புல்லூரின் தலைவன் செங்கோடன் மனதில் வீற்றிருக்கின்ற வடிவேலனே!

அந்தணர்க்கு அழகு அருமறை ஓதுதல். சொன்னசொல் பலிதமாவது, விஞ்சையர்க்கு அழகு. வீரர்கட்கு அழகு, தைரியமாயிருத்தல். திறமையாயிருத்தல், வைசியர்க்கு அழகாம். நிதியுடைய சான்றோர்க்கு அழகு ஒருபாற் கோடாமல் சமனாக இருப்பது. நண்பருக்கு அழகு பரிவோடிருத்தல். உருசியுடைத்தாயிருத்தல், தண்ணீருக்கு அழகு. வீரனுக்கு அழகு, அறிவோடிருத்தல், நவீனமாயிருத்தல், நீளகுதட்கழகு1. தூதுவர்க்கு அழகு, இனிய சொற்கள். இன்பம் தரும் குழந்தையே வீட்டிற்கு அழகு. உலகில் எல்லோர்க்கும் அழகு. நம்மை அடுத்து வந்தவர்களைக் காத்தலாம்.

## 4. சுவர்க்கவாசிகள்

செங்கோடன் மனதில் அகலாதிருக்கின்ற வடிவேலனே!

நீர்நிறைந்த ஏரி, குளம், ஆறு அருகிலுள்ளதும், நன்செய் வயல்கள், பனைமரங்கள், பாக்கு மரங்கள், வாழை மரங்கள் முதலானவை சூழ்ந்துள்ள அழகான பூமியும், பலவகையான சோலைகள் சூழவும், நீதிமன்றங்களும், கோயில்களும், கற்புடைய மகளிரும், சுற்றுவல்ல

---

1 = ?

சான்றோர்களும், அந்தணர் வாழிடங்களும், சிறந்த அன்ன சத்திரங்களும், மடங்களும் , கடைவீதிகளும், புகழ்பெற்ற வணிகர் கூட்டமும், நிறம்பப்பெற்று, நல்ல நவ தானியங்களும் விளைவதாகவும், ஈகையும், இரக்கமும் உடையதாகவும், சிவன், திருமால்கோயில்களில் ஆடலும் பாடலும், நிறைந்து விளங்குகின்ற ஊர்களிலே வாழ்கின்றவர்களைச் சுவர்க்கவாசிகள் என்று கூறுவார்கள்.

## 5. நரகவாசம்

வயல், ஆறு, சோலை சூழ்ந்த புல்லூரின் தலைவன் செங்கோடன் உள்ளத்தில் எழுந்தருளியிருக்கின்ற வடிவேலனே!

பொய்யர்கள், அறிவிலிகள், மூர்க்கர், புலால் உண்ணுகின்ற கொலைபாதர்கள், திருடர், கோள் சொல்லுபவர், கல், முள், நிறைந்த காடு, புலி , கரடி முதலான விலங்குகளின் கர்ச்சனை ஆகியவைகள் நிறைந்ததாய், வெய்யல் நிறைந்தும், தொடர்ந்தும் உள்ளதாய் துன்மார்க்க மக்கள் வாழ்கின்றதாய், அரசாட்சியின்றி, வீட்டுக்கு வீடு ஆட்சி செய்வதாய், வேட்டைநாய்கள் கூட்டமாக உள்ளதாய், பறட்டைத்தலையுடைய குட்டையான பெண்களுடையது மாய், பாம்புப் புற்றுகள் உடையதாய், கோட்டான் கத்தும், சத்துமுள்ளதாய், பலவகையான தெய்வங்களுடையதாய், பழுதடைந்த ஒருசில குடிசைகளே இருக்கின்ற பட்டி எனப்படும் சிறு கிராமமே நரகமாகும்.

## 6. மூதேவி வாழிடங்கள்

செங்கோடன் உள்ளத்தில் உறைகின்ற வடிவேலனே!

மயிர்நிறைந்த ஆட்டின் கீழ்ப்புறத்தில் எழுகின்ற தூசியில், இடுகாட்டில் அழுகிய பிணத்தினைச் சுடுகின்ற புகையினில், கழுதை புரழ்கின்ற சாம்பலில் சென்று துயிலுதலில், தயிர்க்குடம் (சுமந்து) நிற்கும் இடத்தில்,

பூனைவாலில், முந்தானை வீச்சில், கால்கழுவும்போது தண்ணீர் படாத இடத்தில், சேற்று நிலத்தில், மயிர், நகம் விழுந்துள்ள இடத்தில், துடைப்பத்தால் குப்பையை வாரிக்கொட்டும்போது எழும் தூசியில், மனந்தளர்ந்து போவாரிடத்தில், அவலட்சணமாகச் சிரிப்போரிடத்தில், மூதேவி நிலைபெறுவாள் என்று பெரியோர்கள் கூறுவார்கள்.

***ஒப்புமை:*** *மூதேவியிருப்பிடம் பற்றி, எமது சரசுவதி மகால் நூலகப் பருவ இதழில் (ஜர்னல் Vol..XXXII. பக்கம் 13ல்) சரபோஜி மன்னரும் மருத்துவ நூல்களும் என்ற கட்டுரையில் இடம்பெற்றுள்ளதாவது.*

**மூதேவியிருப்பிடம்**

*மாலை யுறங்கல் மயிர்முடித்தல் மாதருடல்*
*கோல மளிந்ததன்பின் கூடுதலுஞ் - சாலவே*
*கொட்டாவி நெட்டி குறுகுறுப்புக் கண்கிடத்தல்*
*நட்டு விழுதல் நவில்.*

*அன்னமிக வுண்பானும் ஆடையழுக் காவானும்*
*இன்னமுமே யீறு விளக்கானும் - முன்னமாங்*
*காலை துயில்வானுங் கல்விநல மில்லானும்*
*ஆலயமாம் மூதேவிக் கங்கு.*

**விருத்தம்**

*காலை மாலை உறக்கமும் மாதர்தன்*
*கோல மேனி அழிந்தபின் கூடலும்*
*சால வுண்டிக்கு இராத்தயிர் சாதமு*
*மாலோ டாகிலும் மாதுவிட் டேகுமே.*

*இஞ்சித் தேன்தயிர் எண்ணெய் இலைக்கறி*
*கஞ்சி கயப்பொடு கங்குலி லுண்பிரேல்*
*செஞ்சொல் மாமகள் பூமகள் சேய்மகள்*
*அஞ்சி அஞ்சி அருகில்விட் டோடுமே.*

## 7. ஆகாதவைகள்

சேல்போன்ற கண்களையுடைய இலக்குமி விளையாடுகின்ற செங்கோடன் மனத்தில் எழுந்தருளியிருக்கின்ற வடிவேலனே!

காலையிலும், மாலையிலும் தூங்குதல், காலால் நிலத்தைக் கீறுதல், கையிலுள்ள துரும்பைக் கிள்ளுதல், பகலில் பெண்ணைப் புணருதல், காலகுடி முடிசாய்ந்திடுதல், மாலையில் கூந்தலைக் கோதுதல், மூக்கின்மேல் விரலை வைத்தல், மார்பினைப் புரட்டுதல், வீட்டுவாசலில், வாசற்படியில் தலைவைத்தல், அம்மி மீது கால்வைத்தல், விளக்கின் நிழலிலும் அடுப்பிலும் கை வைத்தல், கழுதையின் மேலமர்ந்து ஆடுதல் இவ்வகையானவைகள் ஆகாதவைகள்.

## 8. திருமகள் [இலக்குமி] வாழுமிடங்கள்

*செங்கோடன் மனதில் அகலாதிருக்கின்ற வடிவேலனே!*

பசு நடக்கும்போது எழுகின்ற தூசி, வேள்விப்புகை, சான்றோர் பாதங்கள், திடமனதுடையவர்கள், கறவைப் பசுவினுடைய வால்மயிர், சுத்தமான இடம், குதிரையின் முகம், எலுமிச்சம்பழம், அதன் தோட்டினைக்கொண்ட கை, வெற்றிலைப்பாக்கு இருக்குமிடம், தூயவெண்சங்கு, இன்மொழி கூறுபவர்கள், மன்னர்கள், கங்கைக்கரை, முழுநிலா எழும் இரவு, பொன், தானியங்கள், வீடு ஆகியவைகளில் திருமகள் வீற்றிருப்பாள் என்பார்கள்.

## 9. பயனற்றவை

எப்போதும் மகிழ்ச்சியோடு, வள்ளி தெய்வானை மணாளனை மறவாது வணங்குகின்ற செங்கோடன் மனதில் வாழும் வடிவேலனே!

காட்டிலே எருக்கும், பேய்ச்சுரையும் தழைத்தும், மலர்ந்தும் என்ன? வாடி வதங்கினும் என்ன? கறைபடிந்த நாயின் மடியில் பால் சுரந்தென்ன? கோட்டான், கழுதை, கருங்குரங்கு இவைகட்கு மயிர் அதிகமாக வளர்ந்து பயன் என்ன? முள்முருங்கை பூத்து என்ன? காஞ்சிபுரம், எட்டி, பேய்ச்சுரை இவைகள் பழுத்தென்ன? கூத்து ஆடுகின்றவன் சிலம்பம் கற்றுப் பயன் என்ன? மனதில் இரக்கமில்லாதவர் களுக்கு அதிகாரம் வந்து என்ன? மனமிரங்கி ஈகை புரியாதவன் குபேர செல்வத்தோடு வாழ்ந்து என்ன? பயனற்றவையே.

## 10. இதனின் இது சிறந்தது

மங்கையர்கள் மையல்கொள்ளும் அழகுடைய செங்கோடன் மனதில் கோயில்கொண்டிருக்கும் வடிவேலனே!

பனைமரத்தின் விதை பெரிதாயிருந்து பயன் என்ன? ஆலமரத்தின் விதை சிறிதாயிருந்தாலும், வளர்ந்து நிழல் தருவதற்கு ஒப்பாகுமோ? மலைக்கல் பெரியதாயிருந் தாலும், சிறிய இரத்தினமணிக்(கல்லுக்)கிணையாகுமோ? கூகையானது கூவினாலும் , மழலைமொழி பேசுகின்ற கிளிக்குரலாகுமோ? நெட்டிமலர் முல்லை மலராகுமோ? கனத்த சரீரம், நரைத்த தலையும் உடையராய் இருந்தாலும் பெரியோராவரோ? இவரைவிட தூய்மையும், மெய்ஞ்ஞானமும் நிறை கல்வியும், நற்புத்தியும் உடைய சிறுவர் பெரியராம்.

## 11. கற்றோர் சிறப்பு

தமிழறிஞர்களால் புகழப்படுகின்ற செங்கோடன் உள்ளம் பெருங்கோயிலாக வீற்றிருக்கும் வடிவேலனே!

கசப்புமிகுந்த பேய்ச்சுரைக்காய், சுவைமிக்க முந்திரிப்பழத்துக்கு நிகராகாது. காட்டுமரம், வயிரம் பாய்ந்ததாக இருப்பினும், சந்தனக்கட்டையின் மணம் தராது.

வேசியின் அழகு, அழகில்லாத மனைவியின் கற்புக்கு இணையாகாது. சாக்கடையில் விழும் மழைத்துளி, கடலில் உள்ள சிப்பியின் வாயில் விழுந்து முத்தாகும் மழைத்துளிக்கு ஈடாகுமோ? தருமம் செய்யாத பணக்காரரும், அறஞ்செய்கின்ற ஏழையும் ஒவ்வமாட்டார்கள். கல்லாத பேச்சாளர்கள், சான்றோர்க்கு நிகராகமாட்டார்கள்.

## 12. கல்நெஞ்சைத் திருத்த முடியாது

செங்கோடன் மனதினிலே எழுந்தருளியுள்ள வடிவேலனே!

படமெடுக்கும் நல்ல பாம்பினைக் கையில் பிடித்து ஆடவைக்கலாம். நோய்க்கு மருந்து கொடுத்து குணமாக்கலாம். அக்கினித்தம்பம், சலத்தம்பம் செய்யலாம். நூற்றெட்டு அடி உயரமுடைய மரத்தில் ஏறலாம். ஊமத்தங்காய், எட்டிக்காய் முதலானவற்றைத் தின்னலாம். வீரம் பொருந்திய புலியின் வாயைக் கட்டலாம். பேய், பெரும்பூதங்களை ஏவல் கொள்ளலாம். செம்பினைப் பொன்னாக்கும் இரசவாத வித்தை செய்யலாம். முதியவர்களை நரை, திரை இல்லாத இளமையாக்கலாம். நற்குணங்களும், விவேகமும் இல்லாகல்நெஞ்சக்காரர்களை, இதமான சாத்திரங்கள், ஞானநெறி, நீதிகளைச் சொல்லித் திருப்ப முடியாது.

## 13. புகழுடையோர்

சான்றோர்கட்கு, அரிசந்தனம், கற்பகத்தரு, சந்தனம், பாரிசாதம், மந்தாரம் எனும் ஐந்து தருக்கள் போல உதவுகின்ற செங்கோடன் மனதில் வாழ்கின்ற வடிவேலனே!

பெற்றோர் சொல் தவறாது நடக்கின்ற பிள்ளைகளைக் குருவின் புத்திரன் எனலாம். தனது குலத்திற்குப் புகழ்தேடித் தருகின்ற பிள்ளைகளைப் பகீரதன் எனலாம். உண்மையினையே எப்போதும் பேசுகின்றவர்களை சத்திய

அரிச்சந்திரன் எனலாம். சொன்னசொல் தவறாத பேர்களை ஸ்ரீராமர் எனலாம். வைதாலும் பொறுத்துக்கொள்ளும் இயல்புடையவர்களை நீதியுள்ள தருமர் என்று கூறலாம். தஞ்சமென்று வந்தவர்களை ஆதரிப்பவர்களைவிசயன் எனலாம்.

## 14. இதனின் இது சிறப்பு

செங்கோடன் உள்ளங் குடிகொண்ட கடப்பமலர் மாலையணிந்த வடிவேலனே!

வானத்தின் மீது பல விண்மீன்கள் இருப்பினும் ஒரு முழுநிலாவாகுமோ? பன்றி பலகுட்டிகளை ஈன்றாலும் ஒருகுட்டியை ஈனும் யானைக்கு நிகராகுமோ? மீன் பல முட்டைகளையிட்டாலும் ஒரு முதலைக்கு ஈடாகுமோ? பல குஞ்சுகளைப் பொறிக்கின்ற கோழி கருடனுக்கு இணையாகுமா? அறிவில்லாத பிள்ளை ஒரு நூறுபெற்றும் பயனில்லை; அறிவுள்ள ஒருபிள்ளை போதும். அவனால் அவனது குலம் விளங்கும்.

***ஒப்புமை:***

*நன்றிதரும் பிள்ளை ஒன்று பெற்றாலும்*
*குலமுழுதும் நன்மை யுண்டாம்*
*அன்றி யறிவில் லாத பிள்ளையொரு*
*நூறுபெற்றும் ஆவ துண்டோ*
*மன்றில்நடம் புரிவாரேதண்டலை யாரே*
*சொன்னேன் வருடம் தோறும்*
*பன்றிபல ஈன்று மென்ன குஞ்சரமொன்று*
*ஈன்றதனால் பலனுண் டாமே!*

*(தண்டலையார் சதகம்)*

## 15. பயனற்றவை

மனமகிழ்வோடு நல்லவர்களென்று அறிந்து அவர்கட்கு உதவி செய்கின்ற செங்கோடன் மனதில் வீற்றிருக்கின்ற வடிவேலனே!

வாடிய பயிர்தழைக்கப் பெய்யாமல் கடலில் பெய்த மழையும், பசிக்கு உதவாத நெய் பால்களும், (ஏழைக்கு இடாது) அறுசுவை அன்னமும், புசித்தவர்களுக்கு[1], உபசரித்து இடுகின்ற அன்னதானமும், ஏழைகட்குக் கொடாத செல்வமும், குபேரசெல்வங்களை உடையவர்க்கு வழங்குகின்ற சொர்ணதானமும் பலனில்லை. இவை எல்லாம் பேசினும் பலனில்லை.

## 16. பெண்கள் மனதை அறியமுடியாது

தீரனாகிய காளிமுதலியாரின் பெயரனான, குபேர செல்வமுடைய செங்கோடன் உள்ளத்தில் வாழ்கின்ற வடிவேலனே!

கடல்நீரின் ஆழத்தினை அளந்தாலும் அளக்கலாம். தராசில் வைத்து மதயானையை நிறுக்கலாம், பெரியமேருவின் அளவு பொன்னை மாற்றறிந்து விலை மதிக்கினும் மதிக்கலாம். பாம்பின் கால்களை அறியலாம். சான்றோர்களின் உள்ளத்தினைக் காணலாம். உடலில் உயிர் இருக்கும் இடத்தை அறியலாம். மேகம் மழை பொழியும்போது அதன் தாரைகளை எண்ணிவிடலாம். ஆற்று மணலினை எண்ணிவிடலாம். அம்புபோன்ற விழிகளைக் கொண்ட பெண்களின் மனதை அறியமுடியாது.

---

1. புசிப்பவர்க்கு என்றுளது.

## 17. பரத்தையர்க்குக் காசாசை மட்டுமே

செங்கோடன் மனதில் குடிகொண்ட வடிவேலனே!

எட்டிப்பழத்தில் மாங்கனியின் இனிய சுவை உண்டாகாது. இலவங்காயில் பலாச்சுளையின் இனிய அமுதச்சுவை உண்டாகாது. நெட்டியின் கனியைச் சேர்த்துக் கருப்பஞ்சாறு பிழியமாட்டார்கள். நெருப்பில் குளிர்நீர் உண்டாகாது. கொட்டிக்கொடியில் செங்கழுநீர் மலர் பூக்காது. இவைபோல பரத்தையர்களுக்குக் காசாசையேயன்றி, மன்மதனைப் போல சரசலீலைகள் செய்தாலும், அவர்கள் மேல் பிரியம் வைக்கமாட்டார்கள்.

## 18. பயனற்றவை

சித்தம் மகிழ்ந்த வாழ்த்துக்களை நித்தமும் பெறுகின்ற செங்கோடன் உள்ளமதில் உலவுகின்ற வடிவேலனே!

பசிக்கின்றபோது இல்லாத சோறு பயனில்லை. பயிர்கள் வாடியபோது பெய்யாத மழை பயனற்றது. பகைவர்களை வெற்றிகொண்டு வந்தவுடன் கொடாத வெகுமதி பயனில்லை. வாலிபத்தில் செய்யாமல் வயது கடந்து செய்கின்ற திருமணம் பயனற்றது. முதுமையிலும் வறுமையிலும் உதாவத கடன்பொருள் பயனில்லை. செல்வம் குறைந்தகாலத்து உதவாது. செல்வம் மிகுந்த காலத்து உறவாடுதல் பயனற்றது. நெருக்கடி நேரத்தில் உதவாது, அதன்பிறகு செய்யும் உதவி பயனில்லை.

## 19. அரியவர்கள்

செங்கோடன் மனதில் அகலாது உறைகின்ற அசுரர்களை வென்று, அமரர்களைச் சிறைமீட்டுக் காத்த வடிவேலனே!

மக்கள் கூட்டத்திலே நல்ல வார்த்தைகளைப் பேசுகின்றவன் நூற்றின் ஒருவன் செந்தமிழ் நூல்களைக் கற்றுப் புலமை பெற்றிருப்பவன், ஆயிரத்தில் ஒருவன். மன்னர் சித்தம்போல நடப்பவர், பதினாயிரத்தில் ஒருவர். விருப்பத்தோடு விலகாமல் கொடுக்கின்ற வள்ளல், லட்சத்தில் ஒருவர், நெறிமுறை வழுவாது நடக்கின்ற புனிதர் கோடிக்கு ஒருவர். குருவினை மறவாத சீடனைக் காண்பது பூமியில் அரிது.

***ஒப்புமை:***

*ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன் றாம்புலவர்*
*வார்த்தை பதினாயி ரத்தொருவர் - பூத்தமலர்த்*
*தண்டா மரைத்திருவே தாதாகோ டிக்கொருவர்*
*உண்டாயி னுண்டென் றறு.* (ஔவையார்)

## 20. அரிதிலும் அரிது

முன்செய்த புண்ணியத்தினால் உதித்த செங்கோடன் உள்ளத்தில் எழுந்தருளியிருக்கின்ற வடிவேலனே!

எழுவகைப் பிறப்பில், மானிடராதல் அரிது. அப்படி மானிட செனனம் எடுத்தாலும், உயர்ந்த குலத்தில் பிறந்து, ஆற்றங்கரையில் அமைந்த சிறந்த தலத்தினிலே எப்போதும் நித்திய வாசமாயிருந்து, தமிழில் சிறந்த புலமையுடையனாகி, தவத்தோர்களிடம் மெய்ஞ்ஞானம் பெற்று, தீயவரை அணுகாமல், குணசாலியாகிப் பழமொழிகள், ஆகமங்கள் படித்து சிவ சமய பரிபாலனஞ் செய்து, சிறந்த செப, தவங்கள் செய்து, சிவபூசை செய்கின்றவனைக் காண்பது அரிதிலும் அரிது.

## 21. மூர்க்கர்க்கு நற்குணம் வராது

வெற்றித் தலைப்பாகை தரித்துள்ள வீர செங்குந்த மரபில் வந்த செங்கோடன் மனதில் அகலாது வீற்றிருக்கின்ற வடிவேலனே!

பால்,தயிர், வெண்ணெய், பெருங்காயம், உப்பு முதலானதுகள் சேர்த்து நன்றாகச் சமைத்தாலும், பேய்ச்சுரைக்காய், கசப்பு நீங்காது. சர்க்கரையும், முக்கனிகளும் இட்டு, வயலாக்கிச் சேறாக்கி, தேன்விட்டு, அதில் நாற்று நட்டு வளர்த்தாலும் வேம்பு தித்திக்காது. பாம்புக்கு பால் வார்த்தாலும் அதன் விடம் நீங்காது. (இவைபோல) இதமான சொற்களையும், பரிபக்குவமான சொற்களையும், நீதி, நேர்மை, ஞானநெறிகளையும் வித விதமாகக் கூறினாலும், கெட்ட, மூர்க்க குணமுடையவருக்கு, நல்ல குணம் வாராது.

## 22. பெற்றோர் கடமை, மகன் கடமை

செங்கோடன் உள்ளத்தில் உவந்திருக்கின்ற, சிவனது புத்திரனே! கணபதியின் தம்பியே! வடிவேலனே!

தவமிருந்து பெற்ற மகனுக்குத் தந்தை செய்யவேண்டிய கடமை ஏதெனில் சான்றோர் அவையில் இவன் மூடன் என்று சொல்லாது, ஆகமங்கள், புராணங்கள், சகல கலைகள் எல்லாவற்றினும் நல்லவனாகச் செய்து, உலகோர் மெச்ச, வெகு வித்தைகளைக் கற்பித்தாலும், தம் சாதித்தொழிலிலே புலமையுடையவனாகச் செய்து, அதற்கேற்ப நடக்கச்செய்து, நல்ல மணமகளைத் தேடி, யாவரும் கொண்டாடத் திருமணம் செய்துவைத்து மகிழ்வதாம்.

(அதேபோல) இனிய மைந்தனது கடமை ஏதெனில்; பெற்றோர்களைப் பேணிப் பாதுகாத்து, அதிக செல்வங்களைத் தேடி, இம்மை, மறுமை அடையவேண்டும் என்பதாம்.

## 23. தரித்திரர் சிறுமை

தேரோடும் வீதி சூழ்ந்த புல்லூரின் தலைவன், செங்கோடன் மனதில் நீங்காத வடிவேலனே!

நீர் நுழையாத இடத்தில் உருக்கிய நெய் நுழையும், நெய் நுழையாத இடத்தில் பால் நுழையும், பால் நுழையாத இடத்தில் புகை நுழையும், புகையும் நுழையாத இடத்தினில் தரித்திரர், உடல் குன்ற வந்தபோது, சண்டையிட்டு வைது, இல்லை என்று சொன்ன போதிலும் மெள்ளவே நுழைந்திடுவர். பொருளில்லாத தரித்திரருடைய சிறுமை போல உலகில் வேறெதுவும் இல்லை.

## 24. மானமுடையோர் தம்மை நம்பினோரைக் காப்பர்

செங்கோடன் உள்ளத்தில் வீற்றிருக்கின்ற வள்ளி தெய்வானை மணவாளனாகிய வடிவேலனே!

புலி இறந்தாலல்லாது தனது மேல் தோலைத் தராது. நகத்தைக் கொடுக்காது. வீரன் போர்க்களத்தில் உயிர்விட்டாலும் விடுவானே தவிர, புறங்காணமாட்டான். கற்புடைய பெண்கள், இறந்தாலொழிய தங்கள் செல்வங்களைத் தரமாட்டார்கள். பேராசைக்காரன், உயிர்போனால் கூட ஒரு காசும் பிறர்க்குக் கொடுக்க மாட்டான். தரும சிந்தையுள்ளவர்கள்,தலைபோனாலும், தான் சொன்ன சொல்லை இல்லை என்று சொல்ல மாட்டார்கள். (அதுபோல) தன்னைத் தஞ்சமென்று அடைந்தவர்களை, திருமால் சிவன் எதிர்த்தாலும், கைவிடாமல், அரசனைப் போலக் காப்பார்கள் மானமுடையோர்.

## 25. நோயணுகாதிருக்க

வயல்கள் சூழ்ந்த புல்லூரில் வாழ்கின்ற தீரனான செங்கோடன் மனதில் அகலாதிருக்கின்ற வடிவேலனே!

நெய்யுருக்கி, மோர் பெருக்கி, நீர்சுருகி உண்பவரும், இரவில் தயிரும், பகலில் பாலும், நாடோறும் புணர்ச்சியும் விரும்பாதவரும், உடம்பிலும், தலையிலும் எண்ணெய் வழியாமலிருப்பவரும், அதிகமாகச்சுமை சுமக்காமல்

இருப்பவரும், பசித்தாலன்றிப் புசியாதவரும், விரைவாக நடக்காமலும், பூமி அதிரும்படியாக நடக்காமலும் இருப்பவரும்,வெய்யல், பனி, காற்று, மழை இவற்றில் அலையாதவரும், முதல்நாள் சமைத்த பழங்கறிகளை உண்ணாதவரும், மல சலத்தை அடக்காத வருமாக இருப்பவர்கள் பேரைச் சொன்னால்கூட நோய் அணுகாது[1].

## 26. துன்பம் வருங்கால் உதவாதவை

நாடோறும் படைவேட்டியம்மனை மறவாத, செங்கோடன் உள்ளத்தில் எழுந்தருளியிருக்கின்ற வடிவேலனே!

மனப்பாடம் பண்ணாமல் புத்தகத்தில் எழுதி வைத்துள்ள கல்வியும், இரண்டாம் தார மனைவியுடன் வாழ்க்கையும், பரத்தையரைக் கூடி மகிழ்வதும், பிறரிடம் அடிமையாய் இருப்பதும், தான் தேடிய பொருளைப் பிறரிடத்தில் கொடுத்துவைப்பதும், தன்னோடு பிறந்திடாதாரைத் தன் தம்பி, அண்ணன் என்று ஒப்புமையாக உறவு சொல்லிக்கொள்ளுவதும், ஒருசாதியாரைத் தன் தாய், தந்தை, சுற்றத்தார் எனக்கருதி, நம்பி வாழ்வதும் இடுக்கண் வந்த காலத்து உதவாது.

## 27. வீடுபேறடைவோர்

மேன்மையான புல்லூரில் வாழ்கின்ற, காளியின் தோன்றலாகிய செங்கோடன் மனதில் வாழ்கின்ற வடிவேலனே!

அரசமரம் ஒன்று, ஆச்சாமரம் ஒன்று, வேப்பமரம் ஒன்று, புளியமரம் பத்து, விளாமரம் மூன்று அதிக செல்வங்களைத் தருகின்ற வில்வமரம் மூன்று, நெல்லிமரம் ஐந்து, தென்னைமரம் ஐந்து, மாமரம் ஐந்து ஆகிய

1. மூலம் காண்க.

இவைகளைப் பூமியில் தன் கையினாலே நட்டு நீர் ஊற்றி வளர்த்து அளித்தவர்களுக்கு, மூவேழு, இருபத்தொரு தலைமுறை வரைக்கும் நரகமில்லை என்று நான்கு வேதங்களும் கூறும். அவர்களுக்கு நிலையான வீடுபேறும், மிக்க நன்மையும் உண்டாகும்.

## 28. அன்னதானமே சிறந்தது

பாண்டிய மன்னனுடைய நான்மாடக் கூடலாம் மதுரையம்பதியில், ஞானசம்பந்தராக வந்து, சமணரை வென்ற செங்கோடன் உள்ளக் கமலத்தில் உறைகின்ற வடிவேலனே!

பொன், வெள்ளியால் செய்த பாத்திரங்கள் அனேகம் கொடுப்பதும், பூமிதானம் கொடுப்பதும், கோ(பசு)தானம் கொடுப்பதும், சொர்ணதானம், உடைதானம், குடைதானம், மிதியடிகள் தானம், சண்டைக்குதிரை, யானை ஆயிரமாயிரம் கொடுப்பதும் ஆகிய இவைகளைச் செய்தால், இவைகளை ஏற்பவர்கள் பேராசையுடன் இன்னும் வேண்டும் என்று கூறுவர்.

சோறிடும்போது போதும், போதும் எனச்சொல்லி, கையசைத்து, வேண்டாம் என்று சொல்லுகின்ற அன்னதானத்துக்கு இணையானது, வேறு ஒன்றுமே இல்லை.

ஆகையால், அன்னதானமே சிறந்தது என்று சொல்லி வேதங்கள் கூறும்; ஆகமங்கள் வலியுறுத்தும்.

## 29. பாத்திரமறிந்து பிச்சையிடல் வேண்டும்

செங்கோடன் மனதில் எந்நாளும் நீங்காதிருக்கின்ற, இலக்குமியொத்த தெய்வானை வள்ளி மணவாளனாகிய வடிவேலனே!

பாத்திரா, பாத்திரம் அதாவது யாசிப்பவர்களின் தன்மை அறிந்து உதவுதல் வேண்டும். பசுவுக்கு வைக்கோலைக்

கொடுத்தாலும், அது இனிய பாலைத்தரும். பாம்புக்குப் பால்வார்த்தாலும், அது கொடிய நஞ்சையே வெளிப்படுத்தும்.

அதுபோல், உண்மையுள்ள சான்றோர்களுக்குச் செய்யும் அறங்கள் எல்லாம், ஒன்று பலவாகி, உலகில் விளங்கும். அவ்வாறின்றிப் புறங்கூறும் சிறுமைமதி யுடையார்க்கு எவ்வளவு அதிகம் பொருள் கொடுத்தாலும், பாவம்தான் நேரிடும்.

அதனால் நற்பாத்திரம் அறிந்து பிச்சைகள் இட்டால் அறமும் இன்பமும் வளரும் புண்ணியத்தைத் தரும்.

## 30. வினைப்பயன்

செங்கோடன் உள்ளத்தில் ஒருபோதும் விலகாது இருக்கின்ற திருவனைய தெய்வானை, வள்ளியம்மை மணாளனாகிய வடிவேலனே!

மன்னர் நாற்படைகளையும் வழங்குவது அம்மன்னர் செயலல்ல. வழங்கிய பொருளைத் தீர்த்து, அவனை வருந்தச்செய்வது அவ்வழங்கியான் செயலல்ல. வெற்றி பெறும்போது, ஒருவனை வெட்டுவது வெட்டுவான் செயலல்ல. வெட்டும் என்று சொல்லும்போது அவனை வெட்டுவானிடத்தில் ஒருவன் போய் அவனை வெட்ட வேண்டாம் என்று மன்றாட, அவனை வெட்டாமல் விட்டுவிடுவதும் அவன் செயலல்ல.

ஒருவர் செய்த முன்வினைப் பயனை மற்றொருவர் மூலமாக, கூட்டுவிப்பானாகிய சிவபெருமான், அவ்வினை செய்தானை அனுபவிக்கச் செய்கின்றான். இதனை அறியாதவர்கள், உலகில் ஒருவர் தீங்கு செய்தார் என்று அவரை நொந்து வருந்துவார்கள்.

## 31. பேய்கள்

தென்றற் காற்று மிகுதியாக வீசுகின்ற புல்லூரில் வாழ்கின்ற வீரசெங்குந்த மரபினரான செங்கோடன் மனதில் வாழ்கின்ற வடிவேலனே!

பாடுபட்டுத் தேடிய பணத்தைப் புதைத்துவைத்துக் கேடுகெட்டவனும், தனக்கு நிகரில்லை எனக்கூறும் தற்புகழ்ச்சியாளனும், நன்மையை விட்டு விலகி, எதுக்கும், மானம், மரியாதை, நாணம் முதலானவைகள் இல்லாதவனும், சான்றோர் சபை நடுவே (பொய்ச்)சான்று பகர்வோனும், துன்பந்தருகின்ற பகைவர்களையே பின் தொடர்ந்து, இதமாகப் பேசி நட்புக்கொண்டிருப்பானும், பெண்புத்தி கேட்போனும் ஆகிய இந்த ஆறு பேர்களையும், தமிழ்ப்புலவர்கள் பேய்கள் என்று சொல்வார்கள்.

## 32. இவர்க்கு இது துரும்பெனல்

தேவியாகிய காளியம்மையின் திருவடி மறவாத, சிறந்த, செங்கோடன் உள்ளத்தில் வீற்றிருக்கின்ற வடிவேலனே!

ஈகைக்குணம் மிகுந்த உதாரகுணமுடையோர்க்கு எந்தப் பொருளுமே துரும்பாம், மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை ஆகிய மூவாசைகளையும் விட்ட துறவியர்க்கு, உலகாளும் மன்னர்களும் துரும்பாம். கலைகளை அறிந்த சான்றோர்க்குப் பெண்கள் துரும்பாம். இறைவனுடைய (வடிவேலனுடைய) கோயிலை வலம்வந்து, (சரவணபவ எனும்) ஆறெழுத்து மந்திரமோதித் துதிக்கின்றவர்க்கு, மற்ற சிறு பேய்த்தெய்வங்களெல்லாம் அற்பமான துரும்பாம்.

## 33. பதராவார்

செங்கோடன் மனதில் அகலாதிருக்கின்ற திருவார் தெய்வானை, வள்ளியாள் மணாளனாகிய வடிவேலனே!

கல்லாத மூடனும், சோம்பேறியும், பெரியோரை அடுத்து நல்லறிவு பெறாத அறிவீனனும், மாமனார் வீட்டில் வாழ்வோனும், நிறைந்த செல்வத்தை அனுபவிக்காதவனும், பேராசையால் கூடாநட்புக்கொண்டவனும், போர்க்களத்தில் தன் அரசனையே, பகைவரிடம் காட்டிக்கொடுப்பவனும், தற்புகழ்ச்சி கொள்வானும், தனது மனைக்குப் பயந்து, உயர்ந்த விருந்தினர்க்கு உணவை ஒளித்துவைப்போனும் ஆகிய இந்த ஒன்பது பேரையும் சித்தந்தெளிந்தவர்கள் பதர் என்று சொல்லுவார்கள்.

## 34. மனதிலிட்ட கல்

செங்கோடன் உள்ளத்தில் மேவியிருக்கின்ற திருவனைய தெய்வானை, வள்ளியம்மையார் மணாளனாகிய வடிவேலனே!

வஞ்சனையுடைய நட்பும், எதிர்த்துப்பேசி இகழ்கின்ற பெண்டிரும், தந்தை சொல்வதைக் கேளாத பிள்ளையும், சொத்தில் பாகம் கேட்டுச் சண்டையிடும் தம்பியும், அன்பில்லாத அண்ணனும், பாழ் நிலத்தில் விதைத்த விதையும், பயிர்காவல் செய்யாத வேளாண்மையும், கல்வி கற்காமல் சொல்லுகின்ற அறிவிலியும், பொருள்வேண்டி, இஷ்டப்பட்ட நாட்டில் வாழ்வதும், கெட்டவர்களுடைய ஊருக்குச் செல்வதும் ஆகிய இப்பத்தும் செஞ்சொல் உரைக்கின்றவர் மனதிலிட்ட கல் என்பர்.

## 35. ஒன்றுக்கும் உதவாதவர்க்கு உவமை கூற இயலாது

பொட்டிட்ட மடமாதர்கள் ஆசை கொள்ளும் மன்மதனைப் போன்ற செங்கோடன் மனதில் குடிகொண்ட வடிவேலனே!

கருங்கற்கள் உடைந்தாலும் கோயில் கட்டலாம். அதுவே தேவரும் தொழத்தக்கதாகும். மாடு பொதியும்

சுமக்கும்; புஞ்சை நிலத்தை உழவும் பயன்படும். மலம் கூட நாய், பன்றி இவைகளின் பசிக்கு உதவும். கடாவானது வயலை உழும். கழுதை பொதி சுமந்திடும். குட்டிச்சுவர் மறைப்பைத்தரும். துடைப்பம் வீட்டைச் சுத்தம் செய்யும். நிழல் உதவும். ஒருவருக்கும் உதவாதவர்க்கு ஒப்புமை கூறுவதற்கில்லை.

## 36. துர்ச்சனர் இயல்பு

இலக்குமி நிலையாகக் குடிகொண்ட பேறுபெற்ற செங்கோடன் உள்ளத்தில் அகலாதிருக்கின்ற வடிவேலனே!

பாம்பையும் துட்டர்களையும் ஒன்றாய் எண்ணலாம். ஆனால் பாம்பைவிடத் துட்டர்கள்தான் அதிகக்கேடு விளைவிப்பவர்கள். பாம்பு மணிமந்திர ஔடதங்களினால் கட்டுப்படும். துட்டர்களோ, அறிவுநல்கும், நல் வார்த்தைகளை எத்தனை உரைத்தாலும், பல நியாய சாத்திரங்களை கோடிக்கணக்கில் காட்டினாலும், வணக்கமும், ஒழுக்கமும், பட்சமும் கொள்ளமாட்டார்கள்.

பொல்லாத ஒருவன் நல்லவர்களைக் கட்டிப்போட்டு, உடம்பெல்லாம் சவுக்கால் அடித்தாலும், அவர்களைக் கட்டவிழ்த்துவிட்டால் வணங்குவார்கள்.

## 37. கற்புடையாள்

செந்நெல் வயல்களும், நதியும் சூழ்ந்த புல்லூரின் தலைவனான செங்கோடன் மனதில் மேவியிருக்கின்ற வடிவேலனே!

தாயைப்போல பசி வேளையறிந்து அமுதூட்டுகின்ற பரிவும், அழகில் திருமகளை ஒப்பதாகவும், ஏவல் செய்வதில் வேலைக்காரி போலவும், இன்னதுக்கு இன்னபடி என்று புத்தி சொல்லுகின்ற மந்திரிபோலவும், இங்கிதமான

குணங்களைக்கொண்டு, பெருமையில் பூமிதேவியைப் போலவும், கோபமில்லாதவளாய், பஞ்சணையில் கலவித்தொழிலில் வேசையரைவிட எண்மடங்காய் இலங்கி, இவ்வாறு செயல்படுகின்றவளைக் கற்புடையவள் எனலாம்.

## 38. நல்லவாழ்வு

மகிழ்ச்சியைத் தருகின்ற வீரசெங்குந்தர் குலம் விளங்கவந்த செங்கோடன் உள்ளத்தில் உறைகின்ற வடிவேலனே!

தந்தை, தாய், தம்பிமார், மாமன், மைத்துனன், மனைவி, அண்ணன், சுற்றத்தார் ஆகியோருடன் சேர்ந்து வாழ்வதே வாழ்வாம். அது எதற்கு ஒக்கும் எனில், வெள்ளப்பெருக்கிலே ஆற்றைக் கடப்பதற்குப் பசுவின் வாலினைப் பிடித்துக் கொண்டு நீந்திக் கரைசேர்வதற்கு ஒப்பாகும்.

பிறர் ஏசுமாறு இவர்களை விலக்கி, பிறருடன் நேயமாய் வாழ்வது, வாழ்வாகாது. அது நிலையில்லாத நீருடைய பெரிய நதியில், நாயின் வாலைப் பிடித்துக் கொண்டு அக்கரை சேர்வதனை ஒக்கும்.

## 39. நரகம் போகின்றவர்கள் 6 வகையினர்

உலகமெல்லாம் கொண்டாடும் கீர்த்திபெற்ற செங்கோடன் மனதில் அகலாது வாழ்கின்ற வடிவேலனே!

அதிகமாகப் பெண்பிள்ளைகளைப் பெற்றவர்கள், மிக்ககோபத்தினால் புலிபோல சீறுகின்ற மனைவியினால் இகழப்படுவார்கள். கொடிய சொற்களைச் சொல்லு கின்றவர்கள், ஓயாது சாப்பிட்டுக்கொண்டே இருப்வர்கள், பொல்லாத அற்பருக்காளாகி அடிமையாய் வாழ்வோர், தரித்திரர்கள் ஆகிய இந்த ஆறுவகையான பேர்களும் நரகம் எய்துவர் என்பார்கள்.

## 40. கல்வி கற்றலின் தரம்

திருவனைய தெய்வானை, வள்ளிநாயகியாள் மணவாளனாம் செயமுருக வடிவேலனே!

ஒருவன் பதினாறு வயதுக்குள் படித்த கல்வி, கல்லில் எழுதிய எழுத்துப்போல் மனதைவிட்டு அகலாதிருக்கும். (பதினாறுக்குமேல்) முப்பது வயதுக்குள், செம்பொற் றகட்டில் எழுதின எழுத்தேபோல் இருக்கும். முப்பதுக்குமேல் ஐம்பதுக்குள் கற்ற கல்வி, பனை ஓலையில் எழுதிய எழுத்துக்கு நிகராகும். அதற்குமேல் எழுபத்தி ரண்டுக்குள் கற்ற கல்வி காகிதத்தில் எழுதிய எழுத்தாகும். அதற்குமேல் நூறு வயதுக்குள் கற்க விரும்பும் கல்வி, நீர்மேல் எழுத்துக்கு நேர்.

ஆகையால் நூல்களைக் கற்கவேண்டுமெனில் இளமையில் கற்கின்ற கல்வியே கல்வியாகும். அக்கல்வியானது, சான்றோர் அவையில், நினைத்த மாத்திரத்திலே நினைவுக்கு வந்து உதவும்.

## 41. பொதுநலம் பேணுதல்

கெண்டை மீன்கள் விளையாடுகின்ற நதி சூழ்ந்த புல்லூரின் தலைவனான செங்கோடன் உள்ளத்தில் அகலாது உறைகின்ற வடிவேலனே!

திருவலஞ்சுழியில், காவிரி நதி பாதாளம் புகுந்திடவே அங்கு தவம் செய்த ஏரண்ட முனிவர், இதில் ஒரு முடியுடை மன்னனுடைய தலையையேனும் சடைமுடி தரித்த தலையையேனும் கொடுத்தால், இவ்வழி அடைபடும் என்று

---

ஏரண்ட முனிவர், திருவலஞ்சுழியில் தவம் செய்து வந்தார். அப்போது , காவிரியாறு இத்தலத்திற்கு அருகில் ஒரு பெரியகுழி வழியாகப் பூமிக்குள் பாய்ந்தது. அதனைக் கண்ட சோழன் ஒருவன், துன்பமடைந்து, ஏரண்ட முனிவருக்குச் சொல்ல, அவர் அந்தச் சுழியில், ஓர் அரசனுடைய முடித்தலையை அல்லது தவசியின் சடைத்தலையைக் கொடுத்தால் ஆறு உள்ளே

சொல்லவே, அதுகேட்ட ஒருசோழன், தருமமே வெற்றி என்று எண்ணி, யாக்கை நிலையல்ல; கீர்த்தியே நிலையானது என்று சொல்லி அந்தக் குழியில் விழுந்தான். அதுகண்ட ஏரண்ட முனிவர், தானும் அதில் விழுந்தார். ஆகையால் யாவர்க்கும் பொதுநலம் பேணுதலே சிறப்பாம்.

## 42. கற்புக்கு எவரும் நிகரில்லை

திருவனைய தெய்வானை வள்ளி மணவாளனாகிய செயமுருக வடிவேலனே!

.....................................................................................................................

சுழித்திறங்காமல் மேலே பாய்ந்தோடும் என்று கூறினார். இதைக்கேட்ட சோழன், ஆறுபெருகி, உலகம் நன்மையடைய வேண்டும் என்று கருதித்தானே அச்சுழியில் விழுந்து இறந்தான்.

இதனைக் கண்ட அம்முனிவர் நம்முடைய சொல்லினால் அல்லவா அரசன் இறந்தான் என்று வருந்தித் தாமும் அச்சுழியில் விழுந்து இறந்தார். காவிரியும் பாதலத்தில் சுழித்தழியாமல், மேலே பாய்ந்தோடிற்று என்று ஒரு பழங்கதை கூறப்படுகிறது. (திருவாவடுதுறை ஆதீன வெளியீடு: திருவலஞ்சுழி)

ஜெயசோழன் குமாரன் கனகசோழன் இவன் தேவி செண்பகாங்கி, இவன் காலத்தில் காவிரி, திருவலஞ் சுழியிலிருந்த விநாயகரை வலஞ்செய்து, பாதாளத்தில் மறைந்தது. இதனால் சனங்கள் முறையிட்டதுகண்டு, அரசன் விசனமுற, அசரீரி, அரசனே! நீயும், உன் மனைவியுமாயினும் அல்லது ஒரு இருடியாயினும், அந்தப் பிலத்துள் புகுந்தால், காவிரி திரும்புவாள் என்றது. அரசன், அவ்வகையே தன் மனைவியுடன் பிலத்துள்ளே போகத்துணிந்தபோது, அரசனைப் பிரியாத மந்திரிகள் திருக்கோடீச்சுரத்தில், ஏரண்ட ரிஷி தவஞ்செய்கிறார்; அவருடைய கட்டளை பெற்றுப்போகலாம் என, அரசன் அவ்வாறிசைந்து, அவரை மனைவியுடன் பணிந்தனன். இருடி, அரசனைத் தீர்க்காயுள் உள்ளவனாகவும், பணிந்த மனைவியைத் தீர்க்கசுமங்கலியாகவும் இருக்க வாழ்த்தினார். பிறகு, மந்திரிகள் நடந்தவை கூற, இருடி கேட்டு, அரசனுக்குத் ததீசியின் சரித்திரங்கூறிப் புகழடைய வேண்டுமெனப் பிலத்துள் புகுந்தனர். உடனே காவிரி, வெள்ளங்கொண்டு, ஊரில் பிரவேசித்தது. பிறகு அரசன் இருடி சொற்படி அவர் புகுந்த பிலத்தில் முளைத்த ஏரண்ட லிங்கத்திற்கும் அவர் தபஞ்செய்த இடத்தில் பிரதிட்டித்த சிவலிங்கத்திற்கும் ஆலயத்திருப்பணிகள் செய்வித்து எழுபது ஆண்டுகள் ஆண்டு, தன் மகன் சுந்தரசோழனுக்குப் பட்டாபிஷேகம் செய்து, சிவபதம் பெற்றனன். (அபிதான சிந்தாமணி)

*வலைஞர்களின் குழந்தைகட்கு அவர்களின் பசி தணியவேண்டி, காசுகொடுத்தார் மாண்டவ்ய முனிவர். அவர்கள் அக்காசுக்குத் தூண்டில்முள் வாங்கி மீன்களைக் கொன்றதால், அப்பாவத்திற்குப் பரிகாரமாக, அவ்வாறே தூண்டிலில் மேலிருந்து தொங்கிக் கொண்டிருக்கும்போது,*

---

***திருவலஞ்சுழி:*** இந்திரன் பொருட்டு வந்த காவிரி, ஈண்டுச் சுழியில் ஆழ, இந்திரன் வேண்டுகோளால் வரகண்ட முனிவர் அதில் ஆழ, அது பாதாளம் செல்லாது பிரவகித்தது. இத்தலத்து, இந்திரனால் பூசிக்கப்பட்ட கணபதி, அவன் எடுக்க வராமல், அழுந்தியிருக்கிறார். (அபிதான சிந்தாமணி)

***மாண்டவியர்:*** ஒரு தவளையிடம் பிறந்தவர், தவத்திற்சிறந்த ஒரு முனிவர், சாளுவன் என்னும் மன்னனுடைய கருவூலத்தைக் கொள்ளை யடித்தவர்களைப் பிடிக்க வந்த காவலாளிகள், இவரையும் திருடரென்று பிடித்துக்கொண்டு போயினர். அரசன் உண்மையுணராமல் கழுவேற்றுக் கட்டளையிட்டான். கழுவேற்றிய பிறகு உண்மையுணர்ந்து, மிகவும் வருந்தி, இவரை விடுதலை செய்யமுயன்றான். கழுவிலிருந்து இவரை எடுக்கமுடியவில்லை. ஆகவே உடம்பிலிருக்கும் பகுதியை மட்டும், உடம்பில்விட்டு, முன்னும் பின்னும் அறுத்து விடுத்தனன். அன்றுமுதல் ஆணிமான்டாவியரையினர். இவர் குழந்தைப் பருவத்தில் தும்பியின் வாலில் துரும்பை நுழைத்துத் துன்புறச் செய்து விளையாடியதால் கழுவில் ஏறும்படி நேர்ந்ததென்று இவரே ஆராய்ந்துணர்ந்தார். குழந்தைப் பருவத்தில் அறியாமற் செய்த பிழைக்கு, இத்தகைய கொடும் தண்டனையமைத்த இயமனை, மனிதனாகப் பிறக்கச் சபித்தார்.

இவர் கழுவிலிருக்கும்போது, நளாயினி, இருளில், தன் கணவனைக் கூடையின் எடுத்து வரும்போது, இவர் காலில் இடித்துவிட்டாள் இவர் சினந்து, பொழுதுவிடிந்தவுடன் கணவனை இழக்கச் சபித்தார். அவளும் பொழுது விடியாமலிருக்கச் சபித்தாள். தேவர்கள் வேண்டுகோளால், இருவரும் சாபவீடு செய்தனர். (இது கலைக்களஞ்சியம்)

இனி, அபிதான சிந்தாமணி கூறுவது: - இவர் தவளையிடம் பிறந்த இருடி என்பர். சாளுவன் பொக்கிஷத்தைக் கொள்ளையிட்ட திருடரைப் பிடிக்க வந்த காவலாளிகள் இவரையும் கள்ளரென்று பிடித்து அரசனிடம் சென்றனர். அரசன், காவலர் சொற்படி இவரைக் கழுவேற்றினான்; இவரது தன்மையைப் பின் அறிந்த அரசன் வணங்கிக் கம்பியினால் கழுத்திலிருந்த சூலத்தை மெதுவா

தன் கணவனாகிய மௌத்கல்ய முனிவரைக் கூடையில் வைத்துத் தலையில் சுமந்து செல்லும்போது இருளில் அக்கூடை அவருடைய காலில்பட்டு, மாண்டவ்யருக்கு வருத்தம் ஏற்படவே, கோபங்கொண்ட மாண்டவ்யர், பொழுது விடிய, உன் தாலி அறக்கடவது என்று சாபமிடவே, இதுகேட்ட நளாயினி பொழுது விடியாது என்று கூறிச்சென்றிடவே, மூவரும் தேவரும் வந்து, நளாயினியை பொழுது விடியவேண்டும் என்று கேட்டனர். அதனால் கற்புக்கு நிகரொருவருமில்லை.

## 43. எதையும் ஆராய்ந்து செய்யவேண்டும்

திருவனைய தெய்வானை, வள்ளி மணவாளனாகிய செயமுருக வடிவேலனே!

குற்றமற்ற ஒரு அந்தணப்பெண், மகவு வேண்டி, ஒரு கீரிப்பிள்ளையை வளர்த்து வந்தாள். நாட்கள் செல்ல, ஒரு மகன் பிறந்தான். ஒருநாள் அக்குழந்தையைத் தொட்டிலி லிட்டுத் தோட்டத்திற்குக் கீரை பறிக்கச் சென்றாள்.

---

இருபுறத்திலும் அராவுவித்து, நடுத்துண்டை விட்டனன். அன்றுமுதல் இவருக்கு, ஆணிமாண்டவ்யர் எனப்பெயர் வந்தது. தாம், பாலப்பருவத்தில் தும்பிகளைப் பிடித்து வாலில் துரும்பை நுழைத்து விளையாடி அவற்றிற்கு வேதனை தருவித்ததால், அந்தப்பாவம் கழுமரத்தில் இட்டதென யமனாலுணர்ந்து அறியாப்பருவத்தில் செய்த பாவத்திற்கு இவ்வகைக் கடுந்துன்பம் செய்ததனால், நீ பூமியில் மனிதனாகப் பிறக்கவெனச் சாபமிட்டவர். இச்சாபம் ஏற்றதனால் யமன் விதுரனாகப் பிறந்தான்.

இனி, நளாயினி பற்றி: நளன் மகளாகப் பிறந்த நளாயினி மௌத்கல்ய முனிவரை மணந்து, பலவாறு சோதிக்கப்பட்டாள். மேலும் சோதிக்க எண்ணிய முனிவர், குட்டநோய் கொண்டார். தீர்த்த யாத்திரை போக விரும்பினார். இவள், கணவனைக் கூடையில் வைத்துத் தூக்கிக்கொண்டு, தீர்த்தங்கள் தோறும் சென்று, நீராட்டிவந்தாள். முனிவர் ஒரு தாசியைப் புணர விரும்பினார். இவள் தாசிக்குப் பணிவிடை செய்து, அவளை இசைவித்து, இவரைத் தூக்கிக்கொண்டு, இருளில் ஒரு சோலை வழி சென்றனள். அவ்விடம் பூர்வ கருமத்தால் மாண்டவ்ய ரிஷி, கழுமரத்தில் தொங்கிக்கொண்டிருந்தார். இவள் சென்றது இருளிலாதலால், அக்கூடை, மாண்டவ்யர் காலில்பட்டு அவருக்கு வருத்தமுண்டாக்கியது. மாண்டவ்யர் இவளைப் பெண்ணென அறிந்து, நீ பொழுது விடிய மங்கலமிழக்க

அப்போது, தொட்டிலருகே ஒரு பாம்பு வரவும், அதனைக்கண்டு கீரி, அதனைக் கடித்துத் துண்டாக்கியது. அதனைத் தாய்க்கு உணர்த்தச் சென்றிட அவள், தன் குழந்தையைக் கொன்றுவிட்டதென எண்ணி, அக்கீரியைக் கொன்றுவிட்டு, உள்ளே சென்று, நிகழ்ந்ததைக்கண்டு, தன்னுடைய உயிரைப்போக்கிக்கொண்டாள்.

ஆதலால் உலகில் எதையும் ஆராய்ந்து செய்ய வேண்டும்.

## 44. வீணாவன

தனந்தேடிக் கவிதைவாணருக்களிக்கும் மேகம் போன்ற செங்கோடன் மனதில் அகலாது வீற்றிருக்கின்ற வடிவேலனே!

மேட்டுக்களர் நிலத்தின் விதைத்த விதையும், கொண்டிமாட்டுக்குக் கொடுத்து வாங்கிய விலையும், பொல்லாதவர்களுடைய சொல்லும் காட்டில் வீசும் நிலவொளியும், பாலை நிலத்தின் பெய்த மழையும், வெடிப்பில் ஊற்றிய காராவின் பாலும், கண்ணிலார் பெற்ற இரத்தின மணியும், வேசியரின் சுற்றத்தார் தேடிடும் அழகும், செந்தமிழின் பெருமை அறியாதவர்பால் சென்று மனம் வாடுவதும் வீணாம்.

## 45. சிவத்தலங்களைத் தரிசிக்க புண்ணியமும் செல்வமும் வருதல்

திருவார் தெய்வானை வள்ளி மணாளனாம் செய முருக வடிவேலனே!

சிறப்புமிகுந்த கயிலாயமலை ஒன்று, துளுவநாட்டுத் தலம் ஒன்று[1], வடநாட்டுத் தலங்கள் ஐந்து, கொங்குநாட்டுத் தலங்கள் ஏழு, பாண்டி நாட்டில் பதினான்கு, மலைநாட்டில்

1. கோகர்ணம்.

---

எனச்சபித்தனர். இவள், பொழுது விடியாதிருக்க சபித்தனள். இதனால் தேவர்க்கு நித்திய கருமாதிகள் நடவாதது கண்டு, தேவர் மாண்டவ்யரை வேண்ட, அவர் இவளிடம் அனுகிரகம் புரிய, பொழுது விடியச்செய்த கற்பினி. (அபிதான சிந்தாமணி)

இரண்டு, சோழநாட்டுத் தலங்கள் நூற்றுத்தொண்ணூற்றாறு, மலையாளதேசத்தில் பதினைந்து, ஈழநாட்டில் நாற்பத்திரண்டு, ஆக மொத்தம் இருநூற்று எண்பத்து நான்கு சிவத்தலங்களாம் இவற்றையெல்லாம் சென்று கண்டுவந்தவர்க்குப் புண்ணியஞ்சேரும். செல்வம் வந்தெய்தும்.

## 46, விஷ்ணு தலங்கள் தரிசிக்கச் செல்வமும், புண்ணியமும் வரும்

திருவனைய தெய்வானையாள், வள்ளிநாயகியாள் மணாளனாகிய செயமுருக வடிவேலனே!

என்றுமுள வைகுண்டத் தலம் ஒன்று. இனிய திருப்பாற்கடல் ஒன்று. நடுநாட்டில் இருபத்திரண்டு, சோழநாட்டில் நாற்பத்தொன்று, பாண்டிநாட்டில் பதினேழு, மலைநாடு பதின்மூன்று, வடநாட்டில் பதினொன்று ஆக நூற்றெட்டுத் திருப்பதிகளும் விஷ்ணுத் தலமாகும். இவற்றைத் தினமும் நினைக்கின்ற பேர்கட்குப் பாவம் பறந்தோடும். சென்மம் ஈடேறும். செல்வம் வந்தெய்தும்.

---

*துங்கவட கயிலாய முதலா வைந்து*
*துளுவொன்று தொண்டை வளநாட் டெண்ணான்கு*
*தங்குநடு நாட்டிருபத் திரண்டு பொன்னித்*
*தலநூற்றுத் தொண்ணூறு மலைநாட் டொன்று*
*கொங்கேழு சிங்களத்தி லிரண்டு வைகை*
*கொழிதமிழ்நாட் டிரேழு முதலாஞ் சூலச்*
*செங்கையார் தலமிருநூற் றெழுபா னான்கிற்*
*றெக்கிணபாற் கயிலாயந் திருக்குற் றாலம்.-*

(திருக்குற்றாலத் தலபுராணம் - தேவர்கள் சிவத்துரோகமடைந்த படலம்-63)

இதன்படி 274, ஆனால் இவை பாடல்பெற்ற தலங்களில் சதகத்தில் உள்ளவை பொதுத்தலங்கள்.

## 47. இறைவன் உறையுமிடங்களிற் சில

*திருவால் தெய்வானையம்மை, வள்ளியம்மை மணவாளனாகிய செயமுருக வடிவேலனே!*

*(நீ) திருக்கயிலாயம் முதலாகத் திருக்காளத்திவரை கோயில் கொண்டுள்ளாய்.*

## 48. இதுவுமது

*திருவனைய தெய்வானையாள், வள்ளியம்மையாள் மணாளனே! செயமுருக வடிவேலனே!*

*(நீ) திருக்கவுரி முதல் பொதியமலை வரை விளங்குகின்றாய்.*

## 49. இதுவுமது

*திருவனைய தெய்வானையார், வள்ளிநாயகியார் மணாளனே! செயமுருக வடிவேலனே!*

*(நீ) திருச்சோலை முதல் ஈரோடு வரை விளங்குகின்றாய்.*

## 50. இதுவுமது

*திருவொத்த தெய்வானை, வள்ளி ஆகியோர் கணவனே! செயமுருக வடிவேலனே!*

*(நீ) பழனி முதல் திருக்கடம்பாடவி வரை எழுந்தருளியிருக்கின்றாய்.*

---

ஈரிருப தாஞ்சோழம் ஈரொன்ப தாம்பாண்டி
ஓர்பதின்மூன் றாமலைநா டோரிரண்டாம்-சீர்நடுநா
டாறோடீரெட்டுதொண்டை யவ்வடநா டாறிரண்டு
கூறுதிரு நாடொன்றாக் கொள்.

## 51. இதுவுமது

திருவாய தெய்வானைக்கும் வள்ளிக்கும் மணவாளனே! செயமுருக வடிவேலனே!

(நீ) திருவாவினன்குடி முதலானவிடத்திலும், உன் திருவடி நினைப்பவரிடத்திலும், என் மனத்திலும் குடிகொண்டிருக்கிறாய்.

## 52. சிவனைப் பூஜிக்கும் நாள்மலர்

திருவார் தெய்வானை தேவிக்கும் வள்ளிதேவிக்கும் மணாளனே! செயமுருக வடிவேலனே!

ஞாயிற்றுக்கிழமையில் மூன்று இதழாயிருக்கும் வில்வத்திலும், திங்களில் வெண்துளசியாலும், செவ்வாயில் விளா இலையாலும், புதனில் மாதளையினாலும், வியாழனில் வங்கத்தாலும்(?), வெள்ளியில் நாவல் கொழுந்தினாலும், சனியில் விஷ்ணுகரந்தைப் பூவாலும் தவறாமல் சிவபெருமானைப் பூசித்தால், நினைத்த காரியங்கைகூடும். பாவம் தொலையும், வறுமையும், தீவினையால் வந்த தீமையும் தீரும். மிக்க செல்வம் உண்டாகும். தீங்கு வாராது. இதுவே நன்மையாகும்.

## 53. வில்வத்தால் பூசிக்கும் நாட்கள்

திரு போன்ற தெய்வானையம்மன், வள்ளியம்மன் ஆகியோரின் கணவனே! செயமுருக வடிவேலனே!

திங்கட்கிழமை சதுர்த்தி, அட்டமி, சதுர்த்தசி, அமாவாசை, நவமி முதலான நாட்களில் வில்வம் எடுத்தல் கூடாது. ஞாயிறு, செவ்வாய், வெள்ளி, எட்டு, பனிரெண்டு, பதினான்காம் பட்சங்கள், அமாவாசை, திருவோணம், வியதிபாதம், கிரகண நாட்கள் ஆகிய நாட்களில் வில்வம் எடுத்தல் கூடாது.

இவைகள் நீங்கின ஆறுமாதங்கள் வில்வம் எடுத்துச் சிவபெருமானைப் பூசிக்கில் நன்றாம். துன்பம் அகலும்.

## 54. இதனிலும் இது அதிகம்

குபேரனது அளகாபுரிக்கு நிகரான புல்லூரில் வாழ்கின்ற தீரனான செங்கோடன் மனதில் அகலாத வடிவேலனே!

பன்னிரண்டு கோடி மலர்களால் அருச்சிப்பதினும், ஒரு தாமரை மலரால் அருச்சிப்பது நன்றாம். நூறுகோடி தாமரைகளால் அருச்சிப்பதைவிட, ஒரு நீலோற்பலத்தால் பூசிப்பது நன்றாம். நீலோற்பலம் கோடி கொண்டு அருச்சிப்பதைவிட, ஒரு வில்வத்தால் பூசிப்பது நன்றாம். முக்கிளை வில்வங்கள் ஐந்துகோடியையவிட ஒருதுளசி மேலாம்.

இவ்வாறு பூசிப்பது, தோத்திரஞ்செய்வது, செபிப்பது, தியானிப்பது இவைகள் சமமெனினும் ஒன்றுக்கொன்று இலட்சம் நூறு அதிகமாம்.

## 55. புராணம், வேதம், சாத்திரம்

திருநீறு தரித்த வீரபத்திரர் பாதத்தை மறவாத செங்கோடன் மனதில் அகலாதிருக்கின்ற வடிவேலனே!

மச்சம், கூர்மம், சைவம், இலிங்கம், வாமனம், (ஸ்)காந்தம், வராகம், கைவர்த்தனம், வைணவம், பவுடிகம், மார்க்கண்டம், ஆக்கினேயம், பாகவதம், காருடம், பிரமம், பிரமாண்டம், பதுமம், நாரதம் ஆகியவை, பதினெண் புராணங்களாம், ருக்கு, யசுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கும் வேதங்களாம், சிற்பம், பரதம், மனுக்ஞானம், சாமுத்திரிகம், சோதிடம், வாகடம் ஆகிய ஆறும் சாத்திரங்களாம்.

## 56 , 57. 32 அறங்கள்

*செம்பவள வாயுடைய உமையவள் தந்த குமரேசனே! செங்கோடன் மனதில் எந்நாளும் அகலாமல் இருக்கின்ற வடிவேலனே!*

மகவுபொறுவார்க்கு இடங்கொடுத்தல், மகப் பெறுவித்தல், சாதகம் எழுதுதல், விதை வழங்கல், பிள்ளைப்பால் வார்த்தல், மருந்து, அன்புடன் படிப்பவர்க்கு உணவு, உடை அடங்கலும் கொடுத்தல், சத்திரம் கட்டுவித்தல், அறுசமயத்தோர்க்கு உண்டி, தகமையுடையார்க்கு வீடு, இடந்தருதல், வெற்றிலத்தினைக் காத்திடல், நல்ல நூல்களைப் படித்து அதற்கு உரை செய்வித்தல், பிறர் உயிரைக் காத்தல், சிறைச்சோறு, சிறைமீட்டல், தின்பண்டங் கொடுத்தல், எட்டுவகை மணமும் செய்வித்தல், கண்ணாடி உதவுதல், பசுவுக்கு உரைஞ்சக்கல் அமைத்தல், சுமைதாங்கி, சோலைகள் அமைத்தல், தண்ணீர்ப் பந்தல்கள், ஏரி குளம் வெட்டுதல், பாக்கு, வெற்றிலை, சுண்ணாம்பு கொடுத்தல், பெண் போகம், தலைக்கு எண்ணெய் கொடுத்தல், அனாதைப் பிணத்தினை எடுத்து அடக்கம் செய்தல், விலங்கிற்கு உணவளித்தல், வண்ணான் உபசாரம், நாவிதன் உபசாரம் ஆகிய முப்பத்திரண்டு அறங்களையும் செய்யவேண்டும்.

---

முப்பத்திரண்டு அறங்களாவன:- ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத்தோர்க்கு உண்டி, பசுவிற்கு வாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டம் நல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவு வளர்த்தல், மகப்பால் வார்த்தல், அறவைப் பிணஞ்சுடல், அறவைத் தூரியம், சுண்ணாம்பு, நோய், மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி., காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர் துயர் காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், கா, ஆவுரிஞ்சு தறி, விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், விலை கொடுத்துயிர் காத்தல், கன்னிகாதானம் முதலியனவாம். (அபிதான சிந்தாமணி)

## 58. அறுபத்துமூவர் மரபு

*செங்கோடன் மனதில் என்றும் உறைகின்ற, திருவனைய தெய்வானை வள்ளி மணாளனே! செயமுருக வடிவேலனே!*

அந்தணர் பன்னிருவர், ஆதிசைவர் நால்வர், மாமாத்தியர் ஒருவர், மன்னர்கள் அறுவர், குறுநில மன்னர்கள் ஐவர், வணிகர் ஐவர், வேளாளர் பதின்மூவர், இடையர் இருவர், மரபு அறியாதவர்கள் அறுவர், வேடர் ஒருவர், குயவர் ஒருவர், செக்கார் ஒருவர், சாணார் ஒருவர், சாலியர் ஒருவர், பரதவர் ஒருவர், வண்ணார் ஒருவர், பாணர் ஒருவர், புலையர் ஒருவர் ஆக அறுபத்து மூவரும் பெரிய தவத்தைச் செய்து சிவப்பேறடைந்தவர்களாவர். சிறப்புமிக்க இவர்களை நினைத்து வாயினால் சொன்னால் முத்திபெறலாம்.

## 59 – 62 மரபினர் யார் யார் என்பது

*செங்கோடன் உள்ளத்துறைகின்ற திருவார் தெய்வானையார், வள்ளிக்குறத்தியார் மணாளரும், செயமுருக வடிவேலனே!*

திருஞானசம்பந்தர், தண்டீசர், முருகர், சிறப்புலியார், கணநாதர், திருநீலநக்கர், பசுபதியார் சோமாசி மாறனார், அப்பூதி அடிகள், நமிநந்தியார், குங்கிலியக்கலையர், பூசலார் ஆகிய இவர்கள் பன்னிருவரும் மறையவர்கள்.

சுந்தரர், சடையனார், இசைஞானியார், புகழ்த்துணையார் ஆகிய நால்வரும் ஆதிசைவப் பிராம்மணர்கள். சிறுத்தொண்டர் (மாமாத்தியர்) மருத்துவர், கோச்செங்கட்சோழர், புகழ்ச்சோழர், இடங்கழியார், நெடுமாறர், மங்கையர்க்கரசியார், சேரமான்பெருமாள் ஆகிய அறுவரும் அரசர்கள். மெய்ப்பொருணாயனார், கூற்றுவர் நரசிங்கமுனையரையர், கழற்சிங்கர், ஐயடிகள், காடவர்கோன் ஆகிய ஐவரும் குருமன்னர். திருமூலர்,

ஆனாயர் ஆகிய இருவரும் இடையராவர், காரியார், கணம்புல்லர், எறிபத்தர், தண்டி, குறும்பர், குலச்சிறையார் இவர் அறுவரும் மரபு அறியாதவர்கள். கலிக்கம்பர், காரைக்காலம்மையார், இயற்பகையார், மூர்த்தியார், அமர்நீதியார் ஆகிய ஐவரும் வணிகராவர்.

இளையான்குடிமாறனார், நாவுக்கரசர், கலிக்காமர், விறன்மிண்டர், செறுத்துணையார், சத்தியார், முனையடுவார், கோட்புலி, வாயிலார், அரிவாட்டாயர், சாக்கியர், மூர்க்கர், மானக்கஞ்சாரர் ஆகிய பதின்மூவரும் வேளாளர், திருநீலகண்ட யாழ்ப்பாணர், பாணர் மரபு, கலியனார், செக்கார் மரபு, அதிபத்தர், பரதவர் மரபு, திருநீலகண்டர் குயவர். ஏனாதிநாயனார் சான்றார் மரபு. நேசநாயனார் சாலியர். கண்ணப்பர் வேடர். திருக்குறிப்புத் தொண்டர் வண்ணார். திருநாளைப்போவார் புலையர் இவர்கள் எல்லோரும் அறுபத்துமூன்று நாயன்மார்கள் எனச்சிவப்பேறு பெற்றவர்கள்.

## 63. சரியைச் செயல்

செங்கோடன் மனதில் அகலாது எப்போதும் எழுந்தருளியிருக்கின்ற வடிவேலனே!

மணமிக்க மலர்களைத் தருகின்ற நந்தவனங்களை ஏற்படுத்துதல், உள்ளன்போடு அதிலிருந்து மலர்களைப் பறித்தல். அவைகளை மகிழ்வோடு மாலையாகக் கட்டுதல், பேரன்போடு அம்மலர் மாலைகளைச் சந்திரசேகரனாகிய சிவபெருமானுக்குச் சூட்டுதல், கோயில்களைக் கூட்டிச் சுத்தம் செய்தல், சாணத்தால் மெழுகுதல், ஒளிபெறவே எண்ணெய், நெய் விளக்கேற்றுதல், பந்த பாசம் இல்லாமல் கோயில் வலம் வருதல், சிவனடியார்கட்கு அன்னம் படைத்தல், அவர்கட்குப் பணிவிடை செய்தல், அவர்களோடு இணங்கி இருத்தல் முதலிய செயல்கள் சரியைச் செயல்களாம். மனதார இதனைச் செய்வோர் சிவலோகம் அடைவார்கள்.

## 64. கிரியைச் செயல்

ஏழுலகும் பணிந்தேத்தும், திருச்சீரலைவாய் குமரனே! செங்கோடன் உள்ளக்கோயிலில் இருக்கும் வடிவேலனே!

மிக்க மணம் பொருந்திய அகில் முதலான புகையும், நிறைந்த விளக்கு வகைகளும், தூய திருமஞ்சனங்களும், நிறை மணம் கொண்ட நல்ல மலர்களும் மகிழ்ச்சியுடன் கொண்டு, மாயைக்குணமின்றி, வகை சேரும் ஆவின் ஐந்தால் ஆட்டி, உள்ளத்தாலும், புறத்தாலும் வழிபட்டு அருள் வழியில் நின்று அழலோம்புவோர்களே கிரியை செய்வோராவார்.

இப்படி எப்போதும் செய்பவர்கள் சிவனருகில் இருப்பர் என்று நால்வேதங்களும் கூறும்.

## 65. யோகச் செயல்

எல்லாத் திசைகளிலுமுள்ளோர்கள் வணங்குகின்ற திருச்செந்தூரின் மலைக்குமரனே ! செங்கோடன் மனதில் வாழ் வடிவேலனே!

சாத்துவிகம், தாமசம், இராசதம் ஆகிய முக்குணங்களையும், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலன்களையும், மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்தையும் அடக்கி, மூலாதாரக்காற்றதனைத்தையும், அடக்கி அதற்கு அப்பால் முயற்சியால், இருவழிகளையும் நன்றாக அடைத்து, நடுவழியாகிய சுழிமுனை வழியே காற்று சென்று, தாண்டவர் சிலம்பொலித் தானத்தை அடைந்து, அதனைக் கேட்டுத் திகழ்கின்ற பஞ்சாட்சரத்தினை ஓரெழுத்தாய்க் கண்டு, சிவனுடைய நாத பரவொளியிலே அழுந்துகின்ற, இத்தன்மையினைத் தரிசிக்கின்ற அருள்பெறுதலே யோகமாம்.

இதனை முயல்வோர், வேட்டுவன் எடுத்த புழுப்போல விளக்கமடைந்து, நித்திய கடவுளுருப்பெற்று விளங்குவார்.

## 66. ஞானச்செயல்

குற்றமற்ற நான்கு வேதங்களும், திருமாலும், பூதலத்தோர்களும், தேவர்களும், முனிவர்களும், திருமகளும், கலைமகளும் வந்து அடிபணிகின்ற திருச்செந்தூர்க் குமரனே! செங்கோடன் மனதில் உறைகின்ற வடிவேலனே!

பரந்து கிடக்கின்ற புராணங்கள், கலைகள், ஆகமங்கள் ஆகியவைகளையும், பரசமயங்கள் பேசுகின்ற சாத்திரங் களையும் பிறவற்றையும் ஆராய்ந்து அதிலிருந்து பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருளை உணர்ந்து, அதன் பொருளைத் தெளிந்து, உலகத்தில் அறியாமையை நீக்கித் திகழும், அவ் அறிவுபோல், சிவலோக ஞானமே, தேர்ந்து, தெளிகின்ற நெஞ்சம் புரிந்திடுதல் ஞானமாம் இது உள்ளவர்கள் சிவனே ஆவர்.

## 67. யாத்திரைப் பலன்

தேன்மிளிர்கின்ற கடப்பமலர் மாலையணிந்தவனே! செங்கோடன் மனதிலகலாத வடிவேலனே!

மானிடன், நாகப்பாம்பு, முயல், கீரி, சாரைப்பாம்பு, குரங்கு, எலி, கருடன், ஆந்தை, கூகை, அட்டை, கரிக்குருவி, பூனை, மூன்சுறு, சிட்டுக்குருவி, காடை, உடும்பு, கோட்டான், நாய், பன்றி இவை எல்லாம் ஆற்றாங்கரை (கோயில்களு)க்கு யாத்திரை சென்றால் நினைத்த காரியம் கைகூடும்; நன்மையாம் என்று பெரியோர் கூறினர்.

## 68. யாத்திரைக்கு நன்னிமித்தங்கள்

புண்ணிய உடலெடுத்தவனும், மகாயோகியும், பாக்கியம் செய்தவனுமான செங்கோடன் உள்ளத்தில் எழுந்தருளும் வடிவேலனே!

காகம், நரி, புலி, கிளிப்பிள்ளை, குதிரை, யானை, பசு, கோழி, கழுகு, செம்போத்து, மயில், அன்னம் இவைகள்

எதிரிட நன்றாம். வெண்கொக்கு, எரும்புவரிசை, நாரை, பச்சோந்தி, ஆடுகள், மீன் இவைகள் வலம்போகும்போது யாத்திரை போகலாம். நினைத்த காரியங்கள் பொருளுடன் கைகூடும் என்று தமிழில் வல்லவர்கள் கூறுவார்கள்.

## 69. தீ நிமித்தங்கள்

சிவன் மகனே ! திருமால் மருகனே ! செங்கோடன் மனதில் வாழ்கின்ற வடிவேலனே !

தவம் செய்கின்றவர், சந்நியாசி, குருடர், வாணியர், விரித்த கூந்தலுடையார், மொட்டைத்தலையர், தச்சர், கொல்லர், நாவிதர், குயவர், ஒற்றைப்பார்ப்பார். புது மண்பாண்டங்கள், விறகுக்கட்டு, எண்ணெய்க்குடம், நோயாளி, முடவர்கள், குட்டநோயாளியர், காசநோயர், மூக்கரையர், அமங்கலி, முலையில்லாதவள், வெறுங்குடம், தீ, புதுப்புடவை இவைகள் எதிரே வரில் தீ நிமித்தம் என்று சொல்லுவர்.

## 70. நன்னிமித்தங்கள்

செங்கோடன் உள்ளத்தில் எப்போதும் வீற்றிருக்கின்ற வடிவேலனே !

அந்தணரிருவர், கருக்கொண்டவள், நிறைகுடம், சமையல் செய்வோர், கட்டுக்கழுத்தியர், சிறுகுழந்தை, பால்குடம், தயிர்க்குடம், நெய்க்குடம், அமுது(சோறு), வண்ணான் அழுக்குமூட்டை, மந்திரக்குடம், பழங்கள், வெள்ளைநிறப்பூக்கள், வேசியர், இடுப்பில் குழந்தையைத் தூக்கி வருவார், இளங்கன்னிகை, நெல்சுமை, புல்சுமை, கரும்புச்சுமை, சிங்கம், பசுக்கள், திருவிளக்கு, முரசு, சங்கு, இறைச்சி இவைகள் ஊர்வழி போகின்றவர்களுக்கு எதிரே வரின் உண்மையாய் மிகவும் நல்லது. சிந்தை மகிழ, குறித்த காரியம் கைகூடும்.

## 71 தீ, நல்நிமித்தங்கள்

சீதாதேவியின் மணாளன் என்றும், இலக்குமியின் கணவன் என்றும் சொல்லப்படுகின்ற திருமாலின் மருகனே! செங்கோடன் மனதில் வீற்றிருக்கும் வடிவேலனே!

யாதாமொரு காரியத்தினைக் குறித்து, ஊர்வழி போங்காலத்தில், பூனை குறுக்கிடல், தும்மல், பெருமழை, அடைமழை, தூரல், கல்இடறுதல், எங்கே போகிறாய்? என்று கேட்டல், நாய் எச்சில் சோறுண்ணல் இவைகள் ஆகாது.

இடி இடித்தல், யானை பிளிரல், மங்கல ஒலிகள், பேரிகை முழக்கம், முரசு வாத்தியம், குதிரை கனைத்தல், யாழ்ப்பாணர்கள் பாட்டொலி இவைகளைக் கேட்டால் காரியங்கள் நன்மையாய் முடியும்.

## 72. வாரசூலப் பரிகாரம்

சிறப்புகள் மிகுந்து விளங்குகின்ற புல்லூரின் அதிபனான செங்கோடன் உள்ளத்தில் வீற்றிருக்கும் வடிவேலனே!

வாரசூலங்களில் (அவசியம் செல்லவேண்டியிருந் தால்) வடக்கே செல்பவர் நெய்யருந்தியும், கிழக்கே செல்பவர் உணவு அருந்தியும், மேற்கே செல்பவர் பால் அருந்தியும், தெற்கே செல்பவர் எள் உண்டும் செல்லலாம்.

மேலும், வடக்கே செல்பவர் உதயத்திலிருந்து பதினாறு நாழிகைக்கு மேலும், மேற்கே செல்பவர் பனிரெண்டு நாழிகைக்கு மேலும், கிழக்கே செல்பவர் இருபது நாழிகைக்கு மேலும், தெற்கே செல்பவர் எட்டு நாழிகைக்கு மேலும் சென்றால் எதிர்சூலம் இல்லை[1] எனலாம்.

---

1. சூலையுள்ள திக்கில் யாத்திரை போகும்படி நேரிட்டால் திங்கள், சனி(கிழக்கு) 8, செவ்வாய், புதன்(வடக்கு), 11, வியாழன் (தெற்கு) 20, வெள்ளி, ஞாயிறு(மேற்கு)12, இந்த நாழிகைக்குமேல் தயிர், அன்னம் புசித்துப்போக உத்தமம். (பாம்பு பஞ்சாங்கம்)

## 73. எண்ணெய் முழுக்கு

*நெற்றியிலே பொட்டிட்ட மாதர்கள், (மதனன்) என்று சொல்லத்தகும் தீரனான செங்கோடன் உள்ளத்துறை கின்ற வடிவேலனே!*

ஞாயிற்றுக்கிழமை எண்ணெய் தேய்த்துத் தலை முழுகினால் வாழ்வு அழியும். திங்கள் புகழுண்டாகும். செவ்வாய் தீக்காட்டிடும். புதன் வாழ்வு தரும். வியாழன் குற்றம், வெள்ளி செல்வம் அழியும். சனிக்கிழமையில் எண்ணெய் தேய்த்து முழுகினால் செல்வம் உண்டாகும். ஞாயிறு, வியாழன், வெள்ளி ஆகிய நாட்களில் மாத்து இட்டு முழுகவேண்டும். சிரஞ்சீவியாயிருப்பர்: ஆயுள் வளரும் என்பார்கள்.

## 74. ஆகாத நேரம் [இராகு காலம்]

*இராமேசுவரம் முதல் காசி வரை புகழ்பெற்ற செங்கோடன் மனதில் கோயில்கொண்டுள்ள வடிவேலனே!*

ஞாயிற்றுக்கிழமை (உதயத்திலிருந்து) மூன்றரைச் சாமத்துக்குமேல்[1] அதாவது மாலை 4 மணிக்குமேல், திங்கள் அரைச்சாமத்துக்குமேல், அதாவது 7 மணிக்குமேல், செவ்வாய் மூன்று சாமத்துக்குமேல் அதாவது பிற்பகல் 3 மணிக்குமேல், புதன் இரண்டு சாமத்திற்குமேல், அதாவது நண்பகல் 12 மணிக்குமேல், வியாழன் இரண்டரை சாமத்திற்குமேல், அதாவது 1 மணிக்குமேல், வெள்ளி ஒன்றரை சாமத்திற்குமேல், அதாவது 10 மணிக்குமேல், சனி ஒருசாமத்திற்குமேல் அதாவது 9 மணிக்குமேல், மூன்றே முக்கால் நாழிகை அதாவது 1½ மணிநேரம் இராகு காலம் என்று சோதிடநூல் வல்லோர் கூறுவர்.

இவ்வேளையில் மங்கல காரியங்களும், நல்லகாரியங்களும் செய்யலாகாது.[2]

1.ஒருசாமம்-3 மணி நேரம். 2.இராகு காலங்கள்: ஞாயிறு மாலை:4-30-6-00, திங்கள் காலை 7-30-9-00, செவ்வாய் மாலை 3-00-4-30, புதன் நண்பகல் 12-00-1-30, வியாழன் பிற்பகல் 1-30-3-00, வெள்ளி காலை 10-30-12-00, சனி காலை 9-00-10-30.

## 75. தீதுறு நாள், கோள் முதலியன

காசி முதல் இராமேச்சுரம் வரை புகழ்பெற்ற செங்கோடன் உள்ளத்தில் உறைகின்ற வடிவேலனே!

திருவாதிரை, பூரம், பூராடம், பூரட்டாதி, விசாகம், கேட்டை, ஆயிலியம், பரணி, கார்த்திகை, சித்திரை, சதயம், சுவாதி ஆகிய கோள்களிலும், ஞாயிறு, செவ்வாய், சனி ஆகிய கிழமைகளிலும், சதுர்த்தி, சட்டி, நவமி, துவாதேசி ஆகிய பட்சங்களிலும் இவைகள் கூடிய நாட்களிலும், கடன்கொடுத்தல், நோய்கொடு படுத்தல், ஊர்வழி செல்லுதல் இவை முதலானதுகள் ஆகாது என்று கணித நூலார் சொல்லுவார்கள்.

## 76. மங்கல காரியத்துக்கு ஆகாத நாட்கள்

செங்கோடன் மனதில் அகலாது வாழ்கின்ற வள்ளி தெய்வானை மணவாளனாகிய செயமுரு வடிவேலனே!

ஞாயிறு பரணியில்,திங்கள் சித்திரையில். செவ்வாய் உத்திராடத்தில், புதன் அவிட்டத்தில், வியாழன், கேட்டையில், வெள்ளி பூராடத்தில், சனி ரேவதியில், பிறந்த நாள் வந்து சேர்ந்த மாதங்களில் திருமணம் செய்ய லாகாது. செய்தால் விதவையாவர், பெண் திரண்டால் மலடியாயிருப்பாள். பிள்ளை பிறந்தால் இறந்துவிடும். ஊர்வழி போகக்கூடாது. உலகில் இதுகளில் மங்கல காரியங்கள் செய்யமாட்டார்கள்.

திங்கள், புதன், வியாழன், வெள்ளி இவைகள் நன்மை தரும்.

## 77. மனைகோல, புக ஆகாத நாட்கள்

மிகுந்த புகழும், செல்வமும் கொண்டு, தியாகப் பிரபலராக விளங்கும் செங்கோடன் உள்ளத்தில் எழுந்தருளி இருக்கின்ற வடிவேலனே!

இராவணன் இறந்துபட்ட ஆடி மாதத்திலும், பாரதயுத்தம் நடந்த மார்கழியிலும், கம்சன் இறந்துபட்ட ஆனிமாதத்திலும், காமன் ஆகிய மன்மதன் இறந்த

பங்குனியிலும், இரணியன் இறந்த புரட்டாசியிலும் மனைகோலுதல் (வீடு கட்டுதல்) புதுமனை புகுதல், குடிபோதல் கூடாது.[1]

சென்றால், செல்வங்கள், உயிர், மாடு இவைகள் போய்விடும் என்று சோதிட நூல்வலோர் உரைப்பர்.

## 78. புதுமனை கோல, புக நல்ல நாட்கள்

செங்கோடன் மனதில் வாழும், வள்ளி தெய்வானை மணாளனாகிய வடிவேலனே!

சித்திரைத் திங்கள் பத்தில் ஐந்து நாழிகை, ஐப்பசியில் இருபத்தொன்றாந் தேதியில் எட்டு நாழிகை, ஆடி பதினொன்றில் இரண்டு நாழிகை, ஆவணி ஆறில் இருபத்திரண்டு நாழிகை, கார்த்திகை எட்டில் இரண்டு நாழிகை, தை பனிரெண்டில் எட்டு நாழிகை, மாசி இருபதில் எட்டுநாழிகை ஆகிய இந்த நேரத்தில் வாஸ்துபுருடன் எழும் நேரம். இதில், உளம் மகிழ்ந்து மனை கோலினால் நன்மை பயக்கும்.

## 79. மனை கோலும்போது நிமித்தம்

செங்கோடன் உள்ளத்தில் வாழ்கின்ற, தெய்வானை வள்ளிமணவாள வடிவேலனே!

மனைமுகூர்த்தம் செய்யுங்கால் தண்ணீர் வலமாக வந்தால் வாழ்வு பெருகும். இடம் வந்தால் பகைவரும். செங்கல் வந்தால் பொன் சேரும். சிப்பி, கல், வேர்காண மிக உண்டு. புழு, மயிர், சாம்பல், தோல், எலும்பு கண்டால் பயம் சேரும். ஓடு, கரி காணத் தீப்படும். வண்டு, ஊர்வன, பூரான், பல்லி, சிலந்தி இவைகளைக் காணில் உத்தமமாம். உடும்பு, ஆமை, தேள், எலி இவைகள் காண மத்திமம் ஆகும்.

---

1. ஆடித்திங்களில் இராவணன் பட்டதும், மார்கழியில் மகாபாரதயுத்தம் நடந்ததும் புரட்டாசியில் இரணியன் மாண்டதும், பிரமன் பங்குனியில் முடியற்றதும் ஆகுமே என்பர் ஒருசாரார்

## 80. மனையின் அளவுகள்

கவிவாணர்களுடைய வறுமையாகிய இருளை, சூரியனைப் போலப் போக்கிடும் செங்கோடன் மனதில் வாழும் வடிவேலனே!

மனையின் அகலம் மூன்றடி, ஆறடி, ஏழடி, பத்தடியும், நீளம் எட்டு, பதினொன்று, பதினைந்து, பதினாறு, பத்தொன்பது, இருபது, இருபத்திரண்டு, இருபத்தேழு, இருபத்தெட்டு, இருபத்தொன்பது, முப்பது அடிகளைக் கொண்ட வாசல் (நன்றாம்), சுவர், மண்படை வைக்கும்போது ஒற்றைப்படையாயிருத்தல் வேண்டும். வைத்த சுவற்றை மறுபடியும் இறக்கிக் குறைத்து வைப்பது நன்றல்ல என்பர்.

## 81. வீடுகட்டுதல்

தென்னை, வாழை, கரும்பு ஆகியவைகள் நிறைந்து விளங்குகின்ற புல்லூரில் வாழ்கின்ற செங்கோடன் மனதில் அகலாத வடிவேலனே!

தன்னுடைய பேர் இராசி வலமாகில் மனைகோலுதல் நன்மை தரும். இடமாகில் ஆகாது. வீட்டின் நடுப்பாகத்தில் வாசல் அமைத்தால், அந்த வீட்டை விட்டு அவனை விரட்டி விடும். வலப்புறம் ஐந்தும், இடப்புறம் நாலு பங்கும். இதன் நடுவில் வாசல் அமைத்தல் சுகந்தரும். வாசலுக்கெதிரே தூண்கள், கால்கள், கம்பங்கள் இருத்தல் கூடாது. வீட்டின் கதவு தானே வலிய சாத்திக்கொள்ளுமாயின் வீடு பாழாகும். கதவை எங்கே நிறுத்துகின்றோமோ அங்கேயே கதவு நிற்கவேண்டும். அப்படி சாத்துதல் நன்று. வெகுவாழ்வு தரும்.

## 82. மனைக்கு அங்கங்கள் இருக்கவேண்டிய இடம்

சென்னிக்குள (சென்னிகுளமா?) நாள் பழகு? பொன்னைத் தியாகம் செய்கின்ற செங்கோடன் மனதில் அகலாது விளங்குகின்ற வடிவேலனே!

வீட்டிற்குக் கிழக்கில் அடுக்களையும் (சமையல் கட்டு), பொக்கிஷமும், தென்கிழக்கில் பசுக்கொட்டகையும், தெற்கில் குப்பைக்குழியும், தென்மேற்கில் தோப்பும், மேற்கில் எருமைக்கொட்டிலும், வடமேற்கில் நெல்குதிரும், வடக்கில் உள்வீடும், வடகிழக்கில் கிணறும் அமைத்துக் குடியிருந்தால் வாழ்வு செழிக்கும்.

## 83. வீட்டிற்கு ஆகாத மரங்கள்

*யானை முகனுக்கிளையவராகிய நித்திய கலியாண வேலவா ! ஆறுமுகமும் பன்னிரண்டு சுரமும் கொண்ட, செங்கோடன் மனதில் வீற்றிருக்கின்ற வடிவேலனே !*

**எருக்கு, அகத்தி, பனை, முருங்கை, ஆமணக்கு, நாவல், பருத்தி, முள்மரங்கள், நெல்லி, கலியாணமுருங்கை, உதியன் ஆகிய மரங்கள் வீட்டிற்கு முன்னால் இருப்பின் வீட்டில் மூதேவி அடைவாள். வினைகள் வந்து வாட்டும். செல்வம் போகும். மரணம் நேரிடும். தமிழ் வல்லோர்கள் இதனை நிசம் என்று கூறினர்.**

**வீட்டில் இருக்கக்கூடாத மரங்கள்:**

***ஒப்புமை:***

**வெண்பா**

"பருத்தி யிலுப்பை பனையெட்டி நாவல்
எருக்குப் புளிமாவோ டெட்டும் - பெருக்கமுடன்
இல்லிருந் தக்கால மிந்திரனே யானாலும்
செல்லப்போய் நிற்பாள் திரு."

**பருத்தி, இலுப்பை, பனை, எட்டி, நாவல், எருக்கு, புளி, மா ஆகிய இந்த எட்டு மரங்களும் வீட்டில் இருந்தால், அவன் இந்திரனேயானாலும், இலக்குமி விலகிப்போவாள் என்றவாறு:- என்று சில்பசாத்திரம் கூறுகின்றது.**

**மேலும், எமது மகால் 162-ம் எண்ணுள்ள மருத்துவச் சுவடியில், வாழும் மனையில் இந்த மரங்கள் வைக்கக்கூடாது என்ற தலைப்பில் காணப்படுவதாவது:-**

"பருத்தி அகத்தி பனைநெல்லி நாவல்
எருக்கு முருக்கிலவோ டெட்டுமே - பெருக்கவே
எந்தபதி யானாலும், இந்திரபதி யானாலும்
அந்தமனை பாழாய் விடும்" என்பதாம்.

## 84. சாப்பிடத் தகுந்த இலைகள்

*செங்கோடன் மனதில் அகலாத வடிவேலனே!*

அரசிலை, எருக்கிலை, முருக்கின் இலை, வன்னியிலை, ஆமணக்கிலை, ஆலிலை, தாமரையிலை, செந்தாழைமடல் இவைகளில் அமுதுண்லாகாது.

புரச இலை, மாவிலை, பலா இலை, தாழை மடல், தென்னை ஓலை, புன்னை இலை, காஞ்சியிலை, வாழை இலை, நாவலிலை இவைகளின் உண்ணலாம். பொன்னாலாகிய பாத்திரத்தில் உண்டதைப் போலாகும். வேப்பங்குச்சியால் துலக்கினால் உயர்செல்வம் உண்டாகும். வேலங்குச்சியானால் பல் உறுதியாகும். பூலாங்குச்சியானால் போகங்கள் மிகும். நாயுருவியினால் துலக்கினால் வசீகரம் உண்டாகும்.

## 85, 86. பல்லி விழும் பலன்

*சிவகுமாரனாகிய கணபதியின் தம்பியே! செங்கோடன் உள்ளத்தில் உறையும் வடிவேலனே!*

சகுனஞ் சொல்லுகின்ற பல்லி, தலையில் விழுந்தால் கலகமாம், சண்டை உண்டாகும். உச்சியில், விக்கினம் வரும். நெற்றியில் நன்மை. கண்ணிமைகளில் விழில் துக்கம், புருவங்கள், உதடுகளில் விழில் செல்வம் போகும். மூக்கில், வினைசேரும், கண்களில், பொருள் நாசமடையும். வலக்காது, பாக்கியம், இடக்காது துக்கம், பிடரியில் வீழில் மிகவும் துக்கமாம், இடதுபுயம், தீமைகள், வலது புயம், யோகம், செயம்பெறும். முலையில் பாவம், வயிற்றில் விழுந்தால் விருந்து உண்டு, உந்தியில் மகிழ்ச்சியுடைய போகம் உண்டாகும். முதுகில் கூட்டுறவு ஏற்படும். வலது முதுகு மிக்க மகிழ்ச்சி, இடது முதுகில் விழுந்தால் சீடர்

வருவர், ஆடை வரும். அடிவயிற்றில், தீமையாம். குய்யத்தில் போகம் நட்டம், துடையில் சீர்போக(பிதா) மரணம். முன்கால், விலங்கு வந்துசேரும், கெண்டைக் காலில், செயம். கணுக்கால், நடையில், கானகத்தில் திரிவர். புறங்காலில்,தீங்கெய்தும்.இவைகள் பல்லியின் இலக்கணம்.

## 87. பல்லி ஓணான் வீழ்ந்தால்

நெற்றியில் பொட்டிட்டு விளங்கு மாதர்கள், மதனன் என்று சொல்லுகின்ற தீரனான செங்கோடன் மனதில் விளங்குகின்ற வடிவேலனே !

பல்லி, ஓணான் இவைகள், காலில் விழுந்தால், பல செல்வம் உண்டாகும். வலது முன்கையில் விழுந்தால், ஆபரணங்கள் வரும். இடது முன்கையில் பழியும் தீமையும் உண்டாகும். வலது உள்ளங்கையில் இரத்தினங்கள் லாபம், சிலவும் ஆகும். இடது உள்ளங்கை, திரவியம் தீர்ந்துவிடும். வலது புறங்கை வெகுதானியம் சேரும். தலைமயிரில் விழுந்தால் நிறைந்த பயம் ஏற்படும்.

இத்தோஷங்கள் தீரவேண்டில், குற்றமற்ற காஞ்சி வரதராசர் பெயர் சொல்லித் துதிப்பர்.

## 88, 89 அரிசி முதலியவற்றின் குணங்கள்

செம்பவளவாய் உமையாள் மகனான குமரேசனே ! செங்கோடன் மனதில்வாழ் வடிவேலனே !

சம்பா அரிசி(யின் சோறு), உடம்புக்கு சுகத்தைத் தரும். பலம் உண்டாகும். காரரிசி, மந்தத்தைத் தரும், உடல் பெருக்கும். கரப்பான், தினவு உண்டு. வரகு, வாலான் அரிசி, சோளம் இவைகள் உண்டால் வயிறு எரியும், பித்தம் பேதிக்கும், கரப்பான், வாய்வு உண்டாகும். கம்பு வகை மூன்றில் அரிசிக்கம்பு, வாய்வு, கருங்கம்பு, கரப்பான், பெருங்கம்பு, குளிர்ச்சி என்று கவிவலோர் கூறினர்.

சாமை, சன்னியும் பித்தமும் சேராது. எல்லோருக்கும் ஆரோக்கியம், தினை, பித்தம், உடம்பெரிச்சலுக்கு

உணவாகும். கேள்வரகு, வெட்டை, மூலம் உண்டாகும். (பழையதின்) நீராகாரம், பித்தம், வாதம், கிரந்தி, சோகை இவைகளைப் போக்கும். ஒத்தது இருக்கும். பெண்கள் முலைப்பால் சுரக்கும். சுவையுண்டாகும் என்று மருத்துவ நூல்வலோர் கூறினர்.

## 90, 91. கிரையின் குணம்

திருச்சீரலைவாய் மலைக்குமரகுரு தேசிகா
செங்கோடன் மனதில் அகலா வடிவேலனே!

முருங்கையிலை, மந்தம், முருங்கைச்சாறு, ஆரோக்கியம், காய்க்கு, மோகங்கள் போகங்கள் உண்டாகும். பூ, குளிர்ச்சி, வேர்ப்பட்டை, சன்னி, திரிதோஷம், வீக்கம் முதலானவற்றைத் தீர்க்கும். வாய்வை அடக்கும் முருங்கை ஈர்க்கு, சுரைக்காய் வாதம், அயர்ச்சி முதலானவற்றைத் தீர்க்கும். இலை, பித்தம் வரும், கொழுந்து, திரிவாததோஷம் அகற்றிடும்.

பலவகைக் கீரையை உண்டால், அமுது செரிக்கும், முயல்பித்தம், சேத்துமம், வாதம் அத்தனையும் விரட்டும்.

அறுகீரை (அரைக்கீரை) காய்ச்சல், குளிர் சன்னியைக் குணப்படுத்தும், மலசுத்தியாகும், வாய்க்கு ருசியாக இருக்கும். பொன்னாங்காணி, பலம் உண்டு, கண்ணுக்குக் குளிர்ச்சி, பசி எடுக்காது. வேளைக்கீரை, குடல் வாதங்களையும், தூதுவேளைக்கீரை, குன்மத்தையும் தீர்த்திடும். பசலைக்கீரை உண்ண, பித்தம் கல்லெரிப்பு, நீர்க்கட்டு, அரோசிகம் இவைகள் தீரும். சிறுகீரை குளிர்ச்சி, பத்தியத்திற்குகந்தது.

## 92 – 94. காய்களின் குணம்

(பாடல்கள் தெளிவில்லை)

## 95. மாவின் குணம்

செங்கோடன் மனதில் வாழும் வடிவேலனே!

மாங்காய், கிரந்தி, நாக்குப் புண், இருமல், காசம், காமாலை, கண்நோய், வயிற்றுவலி, கால்பித்தவெடிப்பு, வாதம், தினவு முதலான நோய்கள் உண்டாகும். மாங்கனி: பித்தம் உயரும், மந்தம், சீதம், வீக்கம், உடம்பு வரட்சி, பல்நோய் வரும். மாம்வற்றல்: வயற்றுக்கடுப்பு, வழலை, காதுநோய், பித்தம், வாதம், ஊதுபாண்டு, தாபம், வெக்கை, சீதபேதி முதலானவைகளைத் தீர்த்திடும் எனச்சொன்னார்கள்.

**96.** *(பாடல் தெளிவில்லை)*

## 97, 98. பாலின் குணம்

மேருவுக்குச் சமமான செங்கோடன் மனதில் வாழ் வடிவேலனே!

பசும்பால் உள்பித்தத்தைப் போக்கும். மேனி சிகப்பாக உள்ள பசுவின்பால் உடம்பிலுள்ள வாதங்கள் எல்லாம் அகற்றும், மிக்க இதமாக இருக்கும். காராம்பசுவின் பால் காசநோயை நீக்கும். கபிலைப் பசுவின்பால் திரிதோஷங் களை நீக்கும். எருமை மோர் பெருஞ்சோகை, காமாலை, சலக்கழிச்சல், தாகம், பாண்டு, கிராணி இவை நீக்கும். உலகோர்க்கு மூவர் மருந்து என்று அறிஞருரைப்பர்.

பெண்களின் முலைப்பால் கண்ணுக்கு ஆகும். சிகப்புப் பெண் முலைப்பால் காய்ச்சல், திரிதோஷம், சன்னி முதலானவைகளுக்கு ஆகும். கலைமானின் பால் திரிதோஷம் போக்கும். இளநீரும், தேங்காய் நீரும் தாகங்களையும் பித்தத்தையும் தீர்க்கும். ஆற்றுநீர், கடுப்பு மேகம் இவைகளைத் தாக்காது, அதிகமாக்கும், இஞ்சியின் சாறு, வாதம், இருமல், ஈளை, வயிற்றுவலி, சோபம் ஆகியவற்றைத் தீர்க்கும்.

## 99. மூலிகைக்குணம்

சேது முதல் காசி வரை புகழ்கொண்ட செங்கோடன் மனதில் வாழ்கின்ற வடிவேலனே!

தூதுவளை பேய்ப்புடல் தவிர மற்ற கசப்பு எல்லாம் பித்தமகாகும். நெல்லிக்கனி தவிர மற்ற புளிப்பு எல்லாம் வாதம் ஆகும். தேன் தவிர மற்ற இனிப்பு எல்லாம் சேத்துமமாகும். குறும்பாடு, பன்றி, கரடி இவற்றின் இறைச்சி, கோழிஇறைச்சி, அவரை, பாகல்க்காய், பசனை இவற்றை உண்டால் மருந்தைக் கெடுக்கும். சாப்பிடக்கூடாது.

## 100. நீரின் குணம்

செங்கோடன் மனதில் வாழ்கின்ற வடிவேலனே!

(பாசியில்) உண்டான நீர், நோயை உண்டாக்கும், சுனை நீர் குடல்வாதத்தை உண்டாக்கும், மழைநீர் (குளிர்ச்சி தரும்), (பாறை நீர்) சுரத்தை உண்டாக்கும், கிணற்று நீர் குளிர்காலத்துக்கு சூட்டைத் தரும். கோடைக்கு குளிர்ச்சியைத் தரும், தண்ணீரைக் காய்ச்சிப் பருகினால் நோய் வராது.

## 101. இந்நூலாசிரியர்

திடமுடைய பன்னிருகை வேலனே! செங்கோடன் மனதில் என்றும் நிலைத்திருக்கின்ற வள்ளி, தெய்வானை மணவாளனே, செயமுருக வடிவேலனே!

வட கைலைமலை மேலிருக்கும் இயல்பினை மாற்றி இப்பூமியில் வந்து, மான், மழு, அபய, வரதக் கைகளை மறைத்து, இருகை கொண்டவராய், நீலகண்கமும், நெற்றி விழியும் கொண்ட தன்மையை அகற்றி, மனித உருவில் வந்த மருள் **சித்தையர்** என்பாரின் சீர்பாதங்களை மறந்திடா அடியவன் **முத்துக்குமாரனாகிய** நாயேன் அறிந்தும் அறியாமலும் மொழிந்த இந்தச் சதகம் நூறு பாடல்களையும் மிக அன்பாகக் கொண்டருள்வாய்.

**வடிவேல்சதகக் கருத்துரை முற்றும்.**